# SARANGADARA

## *A DRAMA IN TAMIL*

BY

**Rao Bahadur P. SAMBANDAM,** B.A., B.L.,

Author of :

"The Two Sisters," "Galava," "Manohara," "The Curse of Urvasi," "The Two Friends," "Fate and Love," "Simhalanatha," "Pushpavalli," "Amaladitya," "Magapathi," "Farces," "Siruthondar," "The Golden Fetters," "True Love," "The Bandit Chief," "Bricks between" "At any cost," "The Fair Ghost," "The Wedding of Valli," "The Eye of Love," "Vijayarangam," "As you like it," "Ratnavali," "Lord Buddha," "The Tragedy of Silence," "The Good Fairy," "Geetha Manjari," "The True Brother" "As We Sow-So We Reap," "Malavikagnimitra," "Chandrahari," "The Demon Land," "Sabapathy" Part I, "The Pongal Feast" or "Sabapathy" Part II, "A Rehearsal" or "Sabapathy," Part III, "Blessed in a Wife," "The Dancing Girl," "Subbadra—Arjuna," "Karna the Giver," "Sahadeva's Stratagem," "The Surgeon General's Prescription" "Vichu's Wife," "Sakuntala," "Vikramorvasi," "The Point of View" "The Two Selves" "The Tragic Denouement" "The Sub-Asst. Magistrate of Sultanpet" etc., in Tamil, and "Harischandra," and "Yayathi" in English :

*FOURTH EDITION.*

Madras

PRINTED BY INDIA PRINTING WORKS. 2.50

 1931 [Price Per Copy

# சாரங்கதரன்

இஃது

ராவ்பஹதூர்

**ப. சம்பந்த முதலியார்,** பி.ஏ.,பி.எல்.,

அவர்களால் இயற்றப்பட்டது.

இந்நூலாசிரியரால் இயற்றப்பட்ட மற்றத் தமிழ்நூல்கள் :—

லீலாவதி - சுலோசனை, கள்வர் தலைவன், மகபதி, மனோஹரன், இரண்டு நண்பர்கள், நற்குல தெய்வம், ஊர்வசியின் சாபம், இடைச்சுவர் இருபுறமும், என்ன நேர்ந்திடினும், விஜயரங்கம், காதலர் கண்கள், பேயல்ல பெண்மணியே, தாசிப்பெண், மெய்க்காதல், பொன் விலங்குகள், சிம்ஹளநாதன், விரும்பிய விதமே, சிறுத்தொண்டர், காலவரிஷி, ரஜபுத்ரவீரன், உண்மையான சகோதரன், ரத்னாவளி, புஷ்பவல்லி, கீதமஞ்சரி, பிரஹசனங்கள், அமலாதித்யன், சபாபதி முதற்பாகம், பொங்கல் பண்டிகை அல்லது சபாபதி இரண்டாம் பாகம், ஓர் ஒத்திகை அல்லது சபாபதி மூன்றாம் பாகம், வள்ளி மணம், முற் பகற் செய்யின் பிற்பகல் விளையும், புத்த அவதாரம், விச்சுவின் மனைவி, வேதாள உலகம், மனைவியால் மீண்டவன், சந்திரஹரி, சுபத்திரார்ஜுனா, கொடையாளி கர்ணன், சஹதேவன் சூழ்ச்சி, நோக்கத்தின் குறிப்பு, இரண்டு ஆத்மாக்கள், சர்ஜன் ஜெனரல் விதித்த மருந்து, மாளவிகாக்னிமித்ரம், விபரீதமானமுடிவு, சுல்தான் பேட்டை சப் அசிஸ்டென்ட் மாஜிஸ்டிரேட், சகுந்தலை, விக்கிரமோர்வசி, முதலியன.

நான்காம் பதிப்பு.

சென்னை இந்தியா அச்சுக்கூடத்தில்
அச்சிடப்பட்டது

1931



2.50

[விலை [illegible]

INSCRIBED

TO

THE BELOVED MEMORY OF

**MY PARENTS**

P. VIJIARANGA MUDALIAR

AND

P. MANICKAVELU AMMAL

AND

**MY FRIEND**

C. RANGAVADIVELU.

## நாடக பாத்திரங்கள்.

---

| | | |
|---|---|---|
| நரேந்திரன் | ... ... | ஹஸ்திநபுரத்து மன்னன். |
| சாரங்கதரன் | ... ... | நரேந்திரன் புதல்வன். |
| சுமந்திரன் | ... ... | சாரங்கதரன் தோழன். |
| வசுபூதி | ... ... | நரேந்திரன் மந்திரி. |
| சுந்தரகன் | ... ... | அரண்மனை விதூஷகன். |
| மதுரகவி | ... ... | ஒருகவிராயர் பிள்ளை. |
| ரத்னாங்கி | ... ... | நரேந்திரன் மனைவி. |
| சித்திராங்கி | ... .... | சித்திராங்கதராஜன் புதல்வி. |
| மதனிகை | ... ... | ஒரு தோழி. |

வேடர்கள், ரத்னாங்கியின் தோழிகள், கொலையாளிகள் முதலானோர்.

---

கதை நிகழிடம்—பெரும்பாலும் ஹஸ்திநபுரத்திலும், சில பாகம் அதைச் சார்ந்த பிரதேசத்திலும்.

# முகவுரை.

இந்நாடகத்தையாவது அல்லது நான் பதிப்பித்துள்ள, எனது மற்ற நாடகங்களையாவது, எந்த சபையாராவது ஆடவேண்டுமென்றால், முன்னதாக எனக்குச் சேரவேண்டிய ராயல்டி கட்டணத்தைக் கட்டி, என் அனுமதி பெற்றே, பிறகு ஆடவேண்டும்; இல்லாவிடில் காபிரைட் சட்டப்பிரகாரம், போலீஸ் கோர்ட்டில் தாவாவுக்கு உள்ளாவார்கள் என்பதை இதனால் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

நான் அச்சிட்டிருக்கும் புஸ்தகங்கள் வேண்டியவர்கள் சென்னை ஆச்சாரப்பன் வீதி, 70-வது கதவிலக்கமுள்ள வீட்டிலும், எல்லாப் பிரபல புஸ்தக வியாபாரிகளிடமும் வாங்கிக்கொள்ளலாம்.

இப்படிக்கு,

ப. சம்பந்தம்

# சாரங்கதரன்

## முதல் அங்கம்

### முதற் காட்சி

இடம்—ஓர் அடர்ந்த கானகம். காலம்—நடுப்பகல்.

சுமந்திரன் மடிமீது தலைவைத்து சாரங்கதரன் படுத்துறங்குகிறான்.

மதுரகவி ஒரு மரத்தின்மீது உறங்குவது போலிருக்கிறான்.

ஒருபுறமாக வேடர்கள் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கின்றனர்.

மு. வே. அடே, சின்ன ராசா படுத்துக்கினு தூங்குறாருடா, மொள்ளமா பேசுங்கடா!

இ. வே. ஆமாண்டா ஆமாம்—பாவம்! நம்புளுக்கே எளப்பா இக்குதே, அவ்வளவு வேட்டையாடனாரே அவருக்கு எளப்பா இக்காதா? நல்ல வேட்டேடா இண்ணைக்கி!

சுந்தரகன் வருகிறான்.

சுந். அடே, அந்தக் கவிராயர் பிள்ளையை அழைத்துக்கொண்டு வந்தேனே காலையில்—எங்கேயடா அந்த ஆசாமியைக் காணவே காணோம். எங்கேயாவதும் பயந்து ஓடிப்போய் விட்டாரா என்ன?

மு. வே. ஆமாஞ் சாமி, நம்ப காட்லே வந்த பொறவு எங்கேயோ காணவே காணோம், நானும் தேடிப்பாத்தேன்.

இ. வே. இல்லே சாமி, எங்கெயானாலும் ஒளிச்சிக்கினு இப்பாரு சாமி, பயந்து. பாத்தா பயங்காளியாட்டந்தான் இக்குது.

சுந். எங்கே ஒளித்துக்கொண்டு இருப்பார்?

மு. வே. சாமி, தேடிப் பாக்கலாம். அப்பறம் காணப்போனா சின்ன ராசா கோவிச்சுக்குவாரு நம்பமேலே.

இ. வே. ஆமாம், தேடிப்பாக்கலாம்—அடடே! அதோ மரத்துமேலே உக்காந்துக்கினு இக்கிருரு பாருடா!

எல்லோரும். ஆமாண்டா! ஆமாண்டா!

சுந். ஐயா! சுவாமிகளே! சரிதான்! கவி கபியாளுற்போல் இருக்கிறது! வாருங்களையா இப்படி இறங்கி! இதென்ன கண்ணை மூடிக்கொண்டிருக்கிருரே? ஓஹோ! அப்படியா சமாசாரம்!

எல்லோரும். ஆமாய்யா, ஆமாய்யா! [நகைக்கின்றனர்.]

சும. ஸ்! சுந்தரகா! என்ன கூச்சல் அங்கே? இளவரசர் தூங்குகிருரே தெரியவில்லையா?

சுந். இல்லை ஐயா, நாங்களெல்லாம் ரகசியம் பேசிக்கொண்டிருக்கிருேம், அதை நம்முடைய மொத்துகவிராயர் மரத்தின் மேலே இருந்து கேட்டுக்கொண்டிருக்கிருர், வேருென்றுமில்லை—ஐயா, இறங்குகிறீர்களா இப்பொழுது—என்ன?—ஐயா! அதோ உங்கள் பின்னுல் ஒரு கரடி வருகிறது!

[மதுரகவி மரத்தின்மீதினின்றும் கீழே உருண்டு வீழ்கிருன் கூக்குரலுடன்]

அப்பா! இறங்கினுரையா! சும்மா அப்பொழுதே வந்திருந்தால்! உருண்டு விழவேண்டுமோ இதற்கு? போனுற்போகிறது, கண்ணைத் திறவுமையா! கரடியுமில்லை ஒன்றுமில்லை. [அசைத்துப் பார்த்து] இதேது செத்தபிணம் போல் கிடக்கிறதே! கண்ணைத் திறக்கிறீர்களா இல்லையா? [தட்டிப் பார்த்து கண் விழிக்காதிருக்கக் கண்டு] அடே, வேடர்களே! நமது கவிராயர் பிள்ளை செத்துப் போய்விட்டாற் போல் இருக்கிறது. தூக்குங்களடா, இந்தப் பள்ளத்திலே போட்டுப் புதைத்து விடுவோம். [எல்லோருமாய்த் தூக்கப் போகிருர்கள்.]

ம. இல்லை! இல்லை! உயிரிருக்கிறது!

சுந். ஆ! உயிர் வந்ததா? விட்டுவிடுங்களடா ஆனுல்—கண்ணைத் திறவுமையா!

ம. அப்பனே, அந்தக் கரடி என்னமாய் போய் விட்டது?

சுந். அது அப்பொழுதே ஓடிப்போய் விட்டதையா.

ம. எத்தனை காததூரம் போயிருக்கும்?

சுந். அது கூடவா சொல்லவேண்டும்?—நாலு காதம் போயிருக்கும்.

ம. ஐந்து காததூரம் போனால் நல்லது.

சுந். சே! காடியுமில்லை ஒன்றுமில்லை. கண்ணைத் திறக்கிறீர்களா என்ன இப்பொழுது?

ம. [மெல்லக் கண்விழித்து] ஆ! இன்றைத்தினம் நரியினுடைய நரியினுடைய—நரியினுடைய—

சுந். பின்பக்கத்திலே விழித்தீர்கள்! இப்படிவந்து பேசாது உட்காருங்கள். என்ன பயங்காளி! வெட்கமில்லையா?

ம. அப்பனே, அது பயமல்ல—

சுந். பயமல்ல! பின்னையென்ன! ஏனையா மரத்தின்மேல் கண்ணை மூடிக்கொண்டு உட்கார்ந்திருந்தீர்கள் காலைமுதல் இப்படியே?

ம. அப்படியல்ல அப்பா, என்னுடைய தகப்பனார் வார்த்தைக்கு நான் குறுக்கே சொல்வது கிடையாது.

சுந். ஓஹோ! வந்தாரா தகப்பனார் இங்கேயும்?

ம. அவர் சொல்லியிருக்கிறார் ஒரு சந்தர்ப்பத்திலே—[கையிலிருக்கும் ஒரு புஸ்தகத்தைப் பிரித்துப் பார்த்து] "புலிதனைக் காண்பாயாயின் பூனைபோல் மரத்திலேறு" என்று எழுதியிருக்கிறார், பார்த்துக் கொள்ளப்பா.

சுந். அப்புறம் "எலிதனைக் காண்பாயாயின் ஈட்டியை எடுத்துக் குத்து" என்று எழுதினாரோ? நிரம்பத் தைரியசாலி! அவர் பிள்ளை தாங்கள், கேட்பானேன்? உங்களைப் பார்க்கும்போதே இப்படி யிருக்கிறதே, அவரைப்பற்றிக் கேட்பானேன்? பார்த்தால் புலி, பாய்ந்தால் பூனைதானே?

சா. [திடுக்கிட்டெழுந்து] ஆ! ஆ!

சும. அரசே, என்ன சமாசாரம்? என்ன சமாசாரம்?

சுந். என்ன என்ன?

சா. சீ! என்ன கனவு!

சும. அரசே, என்ன? கனவா கண்டீர்? என்ன கனவு?

சா. தோழா, நான் என்ன உறங்கியா விட்டேனிங்கு?

சும. ஆம், காலை வேட்டையாடிய இளைப்பினால் அப்படியே என் மடிமீது சயனித்துவிட்டீர். என்ன கனவுகண்டீர் சொல்லும்? ஏன் உடல் நடுங்குகிறது?

சா. தோழா, ஏனோ ஓர் அற்பக் கனவினால் என் மனம் இவ்வளவு சஞ்சலத்தை யடைகிறது?

சும. என்ன கனவு? சொல்லும்.

சா. என் தாயார் அருமையாக வளர்த்துவரும் கிளியானது தானாகப்போய் தன் தலையை ஒரு பூனை வாயில் நுழைத்துக் கொள்ள, அப்பூனை கடித்ததினால் மரணாவஸ்தை யடைந்தது போல் கனவு கண்டேன்! இது உண்மையாகவே நடந்திருக்குமா? இது ஏதாவது எனக்கு இனி நேரிடப்போகிற விபரீதத்தைக் குறிக்கிறதோ?

சும. அரசே, இவ்வளவுதானா? இதற்குத் தாம் மனச்சஞ்சலமடைவதா? கனவில் என்ன இருக்கிறது? இதாவது இனி வரப் போகிற தீங்கைக் குறிப்பதாவது! அப்படி ஒன்றுமிராது, இதற்குத் தாம் வருந்தவேண்டியதில்லை.

சா. சுமந்திரா, ஏதோ சீக்கிரத்தில் எனக்கொரு பெருங்கெடுதி நேரிடும்போல எனக்குள் தோற்றுகிறது!—சரி, ஈசன் இருக்கிறார்!

சும. எனக்கு அப்படி ஒன்றும் நேரிடாதென்று தோற்றுகிறது, அப்படி நேரிடுவதாயிருந்தபோதிலும் நேரிடும்போது பார்த்துக்கொள்வோம். இப்பொழுதே நாம் துயரப்படுவானேன்? அப்படி வருவது வந்தே தீரும்.—இளவரசே, இன்னும் இதைப்பற்றி ஏன் யோசித்துக்கொண்டிருக்கிறீர்? எது நேர்ந்தபோதிலும் நம்முடைய மனத்தை உற்சாகமாக இருக்கச்செய்வது நமது கடமையன்றோ?

சா. இவ்வற்ப சமாசாரம் ஏன் இவ்வளவு மனக்கவலை யுண்டுபண்ணவேண்டுமென்பது எனக்கே ஆச்சரியமாகத்தானிருக்கிறது!—ஈசன் திருவுள்ள மெப்படியோ?

சும. அரசே, இம்மாதிரி தாம் இருப்பது நியாய மன்று. எழுந்திரும். இன்றைத்தினம் வேட்டையை முடித்துக்கொண்டு சீக்கிரம் ஹஸ்தினபுரம் போய்ச் சேர்வோம்.

சா. எனக்கிப்பொழுது வேட்டையின்மீது மனஞ்செல்லவில்லை— நாம் ஏன் இந்த மிருகங்களைக் கொல்லவேண்டும்? நாமே நாளை இருப்போமென்பது நிச்சயமில்லை, அப்படியிருக்க—

சுந். அதோ புலி! புலி!

சா. சும. [குதித்தெழுந்து விற்களை எடுத்துக்கொண்டு] எதோ? எதோ?—

[மதுராகவி மூர்ச்சையாய்க் கீழே விழுந்து விடுகிறான்.]

சும. எங்கே புலி?

சா. [சுந்தரகன் நகைக்கக்கண்டு] என்ன நகைக்கிறாய்? எங்கே புலி?

சுந். புலி சமாசாரம் தெரியாது, இளவரசே, இதோ கிலியிருக்கிறது. கிலி என்பதற்குப் பதிலாக புலி என்று வாய்தவறிச் சொல்லிவிட்டேன். [எல்லோரும் நகைக்கின்றனர்.]

சும. சுந்தரகா, எப்படியாவது இளவரசர்க்கு உற்சாகத்தை யுண்டாக்கினையே, அதுவேபோதும்.

சுந். பிறகு எதற்காக நான் அதைச் சொன்னேனென்று நினைத்தீர்?

சா. அது போனாற் போகிறது. இவரென்ன இங்கு படுத்து விட்டார்? யார் இவரை வேட்டைக்கு அழைத்து வரச் சொன்னது? ஐயோ பாவம்! சுந்தரகா, எழுப்பு இவரை.

சுந். ஐயா, மொத்துகவி! எழுந்திருமையா—வந்திருக்கிறது— கூப்பிடுகிறது—உம், எழுந்திருங்கள்!

ம. [கண் மூடிய வண்ணம்] என்ன, புலியா?

சுந். ஆமாம்.

ம. நான் செத்துப்போய்விட்டேன் என்று சொல்லியனுப்பி விடுமையா, நமஸ்காரம் உமக்கு!

சா. கவிராயரே, புலி ஒன்றுமில்லை, நானிருக்கிறேன், எழுந்திரும் பயப்படாதீர்.

சும. புலியொன்றுமில்லை ஐயா, வேடிக்கையாகச் சொன்னான் சுந்தரகன்.

ம. [மெல்ல எழுந்து] அப்பா, மறுஜனனம்! கோபித்துக்கொள்ளலாகாது என்மீது. இந்தப் புலிகளுக்கும் நமக்கும் அவ்வளவாக பரிசயம் இல்லை.

சும. உண்மைதான். நாங்கள் வேட்டையாடப்போகிறோம். தாங்கள் இங்கிருப்பது நியாயமன்று. அடே வேடர்களே, உங்களில் இருவர், இவரை நம்முடைய பாளயங்கள் தங்கியிருக்கும் இடத்திற்குக்கொண்டுபோய்ச் சேருங்கள் ஜாக்கிரதையாக. மற்றவர்களெல்லாம் தென்புறமாகச்சென்று ஏதாவது வனவிலங்குகள் பதுங்கியிருந்தால் எழுப்புங்கள்.

[இரண்டு வேடர்கள் மதுரகவியை மெல்ல அழைத்துப்போகின்றனர்; மற்றவர்கள் எதிர்புறமாய்ப்போய் காட்டைக் கலைக்கின்றனர்.]

சா. சுமந்திரா, நீ மாத்திரம் சென்று இன்று வேட்டையை முடித்துவா, எனக்கேதோ ஒரு விதமாக இருக்கிறது.

சும. என்ன, மறுபடியும் அதைப்பற்றியே யோசித்துக்கொண்டிருக்கிறீர்? அதை மறந்துவிடும், வாரும்.—அதோபாரும் இரண்டு புலிகள்! வளையும் வில்லை, தொடும் அம்பை!

[இருவரும் விரைந்துபோகின்றனர்.]

சங். நானும் வேட்டையாடப்போகிறேன். அவர்கள் புலிவேட்டையாடினால் நான் பாளயத்திற்குப்போய் பூனைவேட்டையாட வேண்டும்! ஒரு பூனை நான் வைத்திருந்த தேனை யெல்லாம் குடித்துவிட்டது காலை! [போகிறான்.]

காட்சி முடிகிறது.

---

## இரண்டாம் காட்சி.

இடம்—ரத்னாங்கியின் அந்தப்புரம். காலம்—காலை.

ரத்னாங்கி மஞ்சத்தின்மீது சயனித்திருக்கிறாள்.

தோழி ஒருபக்கம் நிற்கிறாள்.

ர. அடி, தோழி, சாரங்கதரன் வரவைப்பற்றி ஏதாவது சமாசாரம் வந்ததா?

தோ. இல்லை அம்மா. ஆயினும் தாம் ஏன் வீணாகத் துக்கப்படுகிறீர்? அவர் சுகமாய்ச் சீக்கிரம் திரும்பி வருவார்.

ர. உனக்கென்ன கூறாமல்? நீ ஒரு மகனைப்பெற்றிருந்தால் என் வருத்தம் தெரியுமுனக்கு!—ஐயோ! அவனைக் கண்

முன்பாகக் காணுமளவும் எனக்குக் குற்றுயிராகத்தானிருக்கும். அவன் காட்டிற்குச் செல்லும்பொழுதே என் பாதிப் பிராணனைக் கையிற்கொண்டு சென்றான். அவன் சுகமாய்த் திரும்பிவருகிற சமாசாரம் வராமல், ஏதோ வனவிலங்குகளின் வாயிலகப்பட்டானென்று சமாசாரம் வந்து சேருமாயின், பிறகு எவ்வாறு என்னுயிர்நிலைபெறும்? ஐயோ! அவன் அறியாப் பாலனாயிற்றே! கிளியை வளர்த்து பூனை வாயிற் கொடுப்பதுபோல, பெற்ற பிள்ளையை இவ்வளவு சிறு வயதில் மஹாராஜா கானகத்திற்கு அனுப்பினாரே! அடி தோழி, நேற்றைத்தினம் என்கிளி அக்கடும் பூனைவாயிலகப்பட்டது போலச் சாரங்கதரனும் புலிவாயி லகப்பட்டான் என்று சேதி வருமாயின் நான் எப்படித் தரிப்பேனடி?

தோ. அப்படி ஒன்றும் நேரிடாதம்மா, ஒரு குறையுமின்றிச் சீக்கிரம் வருவார். வருந்தாதீர் அம்மணி, கண்ணைத்துடைத்துக் கொள்ளுங்கள்.

ர. ஆம்! யார் விதி யாரைவிட்டது? ஆயினும் என்னைப்போன்ற துர்பாக்கியசாலிகளுமிருப்பார்களா இவ்வுலகில்? கொண்ட கணவனே எனக்குக் கூற்றானால் நான் யாரிடத்தில் குறை கூறிக்கொள்வது? எல்லாவற்றிற்கும் சுவாமி யிருக்கிறார்!— தன் மைந்தனுக்கு மணம் பேசிய பெண்ணின்மீது தான் மோகங்கொண்டு தானேமணம் புரியவிரும்புவதுண்டோ இப் பூவியில்? அது போனாற் போகிறது. அதன்பொருட்டு இங்கு இச்சமயத்தில் அவன் இராவண்ணம் காட்டிற்சென்று வேட்டையாடிவர மனந் துணிந்து அனுப்புவதா? பிள்ளையாயிற்றே என்று கொஞ்சமேனும் மனவிரக்கமிராதோ? இவர் சித்திராங்கியை மணஞ்செய்துகொள்வதை அவன் வேண்டாமென்றானா என்ன? சக்களத் தியாவாள் என்றும் பாராமல் நானே, சரிதான் உமதிஷ்டம், என்று சொன்னேனே! அவனோ அறியாப்பாலன்! —கண்ணே! சாரங்கதரா! என் பாழ்வயிற்றிற் பிறந்த பயனிது!—

தோ. அம்மா, சித்திராங்கி அம்மாள் மஹாராஜாவை மணஞ்செய்து கொள்ள மாட்டேனென்று உறுதியாய்க் கூறிவிட்டதாகச் சொல்லுகிறார்களே!

ர. இருக்கலாம், ஆகவே அவள் சம்மதிக்குமளவும் சாரங்கதரன் பட்டணத்திலில்லாதிருக்கட்டும் என்று மஹாராஜா யோசிக்கிறார்போலும்.

தோ. அம்மா, சித்திராங்கி அம்மாள் ஒரே பிடிவாதமாயிருந்தால் பிறகு மஹாராஜா அந்தம்மாளை நம்முடைய இளவாசருக்கே விவாகம் செய்து வைக்கமாட்டாரோ ?

ர. இவ்வளவு தூரம் நேர்ந்தபின் அப்படி ஒன்றும் நடவாதிருத்தலே நலம். சாரங்கதரனிடம் சித்திராங்கியைப்பற்றிய சமாசாரம் ஒன்றும் சொல்லாதிருக்கவேண்டும்.

[வெளியே ஒருதாரை சப்திக்கிறது.]

ஆ! அதோ சாரங்கதரனுடைய தாரை! வந்துவிட்டான் உயிருடன் என் கண்மணி !—

[சாரங்கதரன், சுமந்திரன், சுந்தரகன், மதுரகவி வருகின்றனர்.

ரத்னாங்கி சாரங்கதரனைக் கட்டி யணைக்கின்றனள்.]

சும. அம்மணி, உம்முடையகுமாரனை ஒப்புவித்துவிட்டேன், என் கடனைத் தீர்த்துவிட்டேன்.

ர. ஆம், தீர்த்துவிட்டாய் சுமந்திரா — கண்ணே சாரங்கதரா, இத்தனை நாள் சென்றதா உனக்குத் திரும்பிவர ? உன்னை நினைந்து என்னேரமும் வருந்திகொண்டிருக்கிறாள் ஹஸ்தினபுரத்தில் உன்தாய், என்று கொஞ்சமாவது எண்ணினையா எப்பொழுதாவது ? பெற்ற மனம் பித்து பிள்ளை மனம் கல்லென்னும் உண்மை எங்கேபோகும் ?

சா. ஆம், அம்மணி, நீர் கூறுவது உண்மைதான். வேட்டையினுடைய விநோதத்தில் அரண்மனையின் ஞாபகம் எனக்குச் சிறிதுமில்லாதிருந்தது. தந்தை முதலிய யாவரும் க்ஷேமந்தானே ?

ர. க்ஷேமந்தான்.

சுந். அம்மணி, நமஸ்காரம். நம்முடைய மதுரகவி என்னவாயிருக்கிறார் ?

ர. ஆ, சுந்தரகா, வந்தாயா நீயும் ? நான் அவ்வளவு கூறியும் அப்பேதையாகிய மதுரகவியை இழுத்துக்கொண்டு போய்விட்டாயே !

சுந். ஐ ஐயோ, என்பாபமா ? எனக்கொன்றும் தெரியாதே.

சும. சுந்தரகா, மதுரகவி தானாக விரும்பிவந்ததாக எங்களிடம் கூறியது பொய்யோ ?

ம. அம்மணி, அடியேன் பட்டபாடு சுவாமிக்கே புற்புதம் !— அன்றைத்தினம் இரவு—

சுந். நான் சொல்லுகிறேன் இருங்களையா.—இவர் என்ன செய்தார், அன்றைத்தினம் இரவு என்னிடத்திலே வந்து—

ம. ஐ ஐயோ ! நான் போகவில்லை, அவர்தான் வந்தார், அவர் தான் வந்தார் !

சுந். இருங்களையா சொல்லுகிறேன்.—என்னிடத்திலே வந்து, வேட்டையாடுவதை நான் பார்த்ததில்லை—

ம. ஐ ஐயோ ! அவ்வளவும் பொய், பொய் !

சுந். ஆமாமையா ! நான்தான் சொல்லுகிறேனே ! பொய்யேது ? வேண்டுமென்றால் உங்கள் தகப்பனாரைக் கேட்டுபாருங்கள். —அப்புறம்—

ம. ஐயோ ! என் தகப்பனார் ஒன்றும் இதைப்பற்றிச் சொல்லவில்லை ஐயா !

சுந். எல்லாம் சொல்லியிருக்கிறார். மூன்றாவது அத்தியாயத்திலேபாருங்கள்—அப்புறம், நான் மாட்டேனென்று சொல்லியும் கேட்கவில்லை. என்காலைப் பிடித்துக்கொண்டு வேண்டாக் குறையாக வேண்டினார்.

ம. இல்லை, இல்லை, அம்மணி ! இவர்தான் என்காலைப்பற்றி இழுத்துக்கொண்டு போய்விட்டார்.

சுந். அடே ! இருமையா ! அதைத்தான் நான் சொல்லுகிறேனே. நீங்கள் என்காலைப் பிடித்தால் என்ன, நான் உங்கள் காலைப் பிடித்தால் என்ன ?—அப்புறம் வேட்டைக்கு வந்தாரா, பிறகு—

ம. இல்லை, இல்லை, அம்மணி ! நான் சொல்வதைக் கேளுங்கள்.!—

சுந். இருமையா சொல்லுகிறேன்! அவசரம்!—அம்மா, அப்புறம்—

ம. அம்மணி ! அம்—

[சுந்தரகன் மதுரகவி பேசாதபடி அவன் வாயை மூடிவிடுகிறான்.]

ர. சுந்தரகா, போதும் உன் விளையாட்டை நிறுத்து; அவனை ஒன்றும் செய்யாதே!

சுந். நான் என்ன அவரை ஏதாவது தொந்தரவு செய்கிறேனு என்ன? அது ஒன்றுமில்லை என்று எண்ணுங்கள்.

சா. சுமந்திரா, நேரமாய்விட்டது, நாம் போவோம் வா. பிதாவைப் பார்த்துவிட்டு, நம்முடைய குதிரைகள் புருக்கள் முதலியன வெல்லாம் நாம்போயிருந்த காலத்தில் என்னகதியாயினவோ என்று அறிந்துவருவோம் வா.

ர. எந்நேரமும் உனக்கு உன் பந்தயக்குதிரைகளும் புருக்களுந் தானே கவலை!

சா. சுமந்திரா, நான் போகிறேன், நீ வருகிறாயா இல்லையா?

[ரத்னங்கி சுமந்திரனுக்கு போகாது நிற்கும்படி சைகை செய்கிறாள்.]

சும. ஐயனே, நான் இதோ வந்துவிட்டேன். முதலில் தாங்கள் நமது புருக்கள் சரியாக இருக்கின்றனவா என்று பார்த்து வாருங்கள். இதற்குள்ளாக நானும் வந்துவிடுகிறேன். பிறகு இருவருமாக மஹாராஜாவினிடம் போவோம்.

சா. சரிதான் நான் போகிறேன். [போகிறான்.]

ர. சுந்தரகா, மதுரகவி, நீங்கள் சற்று அப்புறம் போயிருங்கள்.

சுந். அப்படியே, அம்மணி. [தோழி போகிறாள்.]

ம. அம்மணி, நான் இந்த வேட்டையைப்பற்றி ஒரு பிரபந்தம் பாடியிருக்கிறேன். அதைச்சற்று ராஜசபையில் அரங்கேற்றுக்கொடி செய்யவேண்டும்.—

சுந். அரங்கேற்றுக் கொடியா? ஒழிந்தது. இதில் தெரியவில்லையா பிரபந்தம் பாடின மூஞ்சி!

ர. நல்லது அப்புறமாகட்டும் போ.

[சுந்தரகனும் மதுரகவியும் போகிறார்கள்.]

சும அம்மணி, என்ன சமாசாரம்?

ர. நான் விரைவிற் சொல்லுகிறேன் கேள். நாம் சாரங்கதரனுக்கு விவாகத்திற்காகத் தீர்மானித்து வைத்திருந்த சித்திராங்கியை மஹாராஜா தான் மணம் புரியவெண்ணி, சூதினல் அவளை இங்குகொணர்ந்து, வேறொரு அந்தப்புரம் ஏற்படு

த்தி அதில் வைத்திருக்கிறார். அவளோ ஒரே பிடிவாதமாய்ச் சாரங்கதரனையே மணம்புரிவேன் என்றிருக்கிறாளாம். அவளைக் கண்டது முதல் மஹாராஜா அவள்மீதுமோகமாகி என்னிடம் பேசுவதுமில்லை. சாரங்கதரனைத் திடீரென்று வேட்டைக்கனுப்பியதும் அதன்பொருட்டே என்று மெல்லவூழியர்களால் அறிந்தேன். இவ்விஷயங்களெல்லாம் சாரங்கதரனுக்குத்தெரியுமாயின் பிறகு என்ன என்ன தீங்கு நேரிடுமோ என்று என்மனம்கவலைப்படுகிறது. சுமந்திரா, நீதான் இதற்கொருமார்க்கம் சொல்லவேண்டும்.

சும. நான் இப்படியேதாவதிருக்கவேண்டுமென்று அப்பொழுதே எண்ணினேன்; அவ்வண்ணமே முடிந்தது. அம்மணி, இப்பொழுது இளவரசருடன் சித்திராங்கி விஷயம் ஒன்றும்கூறாதிருத்தலே நலம். கொஞ்சக்காலம் பொறுத்து பிறகு காரியங்கள் என்னவாகின்றனவெனப் பார்ப்போம். என்ன கஷ்டகாலம்! விபரீதம்!—

ர. என்ன நேரிட்டபோதிலும் சுமந்திரா, உன்னையே நம்பியிருக்கிறேன். நீதான் சாரங்கதரனைத் தீங்கினின்றும் காப்பாற்றவேண்டும். அவனோ அறியாப்பாலன். வயதாகியும் இன்னும் சிறு பிராயத்துக் குணமுடையவனாயிருக்கிறான்.

சும. அம்மணி, என்றால் என்ன முடியும்? எல்லாவற்றிற்கும் ஈசன் ஒருவனிருக்கிறார். நான் சீக்கிரம் சாரங்கதரனிடம் போகவேண்டும், விடையளியும்.

ர. போய்வா, நான் கூறியதுமாத்திரம் ஞாபகமிருக்கட்டும்.

சும. அம்மணி, தாம் வளர்த்துவரும் கிளி சுகமோ?

ர. சுமந்திரா, உனக்கு யாராவது கூறினார்களா என்ன? அது நேற்றைத்தினம் ஒருகடும் பூனைவாயிலகப்பட்டு இறந்தது! அதையேன் இப்பொழுது கேட்கிறாய்?

சும. விசேஷம் ஒன்றுமில்லை. நான் வருகிறேன் அம்மணி.— [தனக்குள்.] துர்ச்சகுனம்! துர்ச்சகுனம்! [போகிறான்.]

காட்சி முடிகிறது.

## மூன்றாங் காட்சி.

இடம்—சித்ராங்கியின் மாளிகை. காலம்—சாயங்காலம்.

சித்திராங்கி வருகிறாள்.

சி. ஐயோ! என் இளமையை யெல்லாம் இவ்வாறு நான் வீணிற் கழிப்பதோ? என் யௌவனமெல்லாம் நடுக்காட்டிற் புஷ்பித்த புஷ்பத்தைப்போல் வியர்த்த மாவதோ? பெண் பேதை யாய்ப் பிறந்து பெற்ற பயனீதோ? அழகின்றிப் பிறந் தேனா அல்லது ஐஸ்வரியமின்றிப் பிறந்தேனா? இல்லை! ஈசன் அருளின்றிப் பிறந்தேன்! இல்லாவிடின் இப்படிப்பட்ட கதி எனக்கு வாய்க்குமோ? மைந்தனுக்கென்று மணம் பேசி, பிறகு எனக்கு மறலியாகிய இம்மகானுபாவன், தான் மணம் புரிய விரும்புவாரோ? நான் எவ்வளவு நியாயமெடுத் துக் கூறியும் செவியுறாது தினமும் வந்தென்னை நிர்ப்பந்திக் கிறார். அம்மட்டும் மதனிகை கூறியவண்ணம் நான் விரதம் பூண்டிருப்பதாகக் கூறியதே எனக்கிப்பொழுது பெரும் நலமாய் முடிந்தது! ஆவது ஆகட்டும், என் பிராணநாதனாகிய சாரங்கதரனையே மணம் புரிவேனேயொ ழிய வேறொரு புருஷனையும் நான் கனவிலும் நினையேன். எந்த க்ஷணம் நான் இங்கிருந்தனுப்பப்பட்ட அவரது படத்தைப் பார்த்தேனோ அந்த க்ஷணமே, அவரையே நான் பர்த்தா வாகக் கோரினேன். அத்தீர்மானித்தினின்றும் இப்பொழுது நான் தவறுவேனோ? அதுவும் அழகனைவிட்டு ஆண்டியைப் பிடிப்பதோ? சித்தஜனைவென்ற அழகுவாய்ந்த அந்த ராஜகுமாரனை விட்டு ஆண்டியைப்போல் நரைத்துந் திரைத் தும் கிடக்கும், மகனுக்கு மறலியாகிய இப்பாவியை, நான் மணப்பேனோ? என் பிராணநாதனுடைய படத்திற்கும் இதோ இருக்கும்படியான நரேந்திரனுடைய படத்திற்கும் எவ்வளவு பேதமிருக்கிறது? [சாரங்கதரனுடைய படமொன்றை எடுத்து] இவ்வுருவைச் சிருஷ்டிக்கவேண்டித் திருஷ்டி பரி ஹாரமாக முதலில் அவ்வுருவைச் சிருஷ்டித்தானோ பிரமன்? [அங்கு தொங்கவிட்டிருக்கும் நரேந்திரன் படத்தைப் பார்த்து] அல்லது அழகிலும் அசங்கியத்திலும் தனது வல்லமையைக் காட்ட இவ்விருவரையும் உண்டாக்கினானோ? அல்லது என்

மனத்தைக் கவரவென்று இந்த உருவையும், என் மனத்தைப் பிடிக்கவென்று அவ்வுருவையும் சிருஷ்டித்தானோ? சந்திரனை வென்ற இவ்வதனத்தையும், அம்பை நேர்விழியையும், சிலையை நிகர் புருவத்தையும், கோவையை நிகர்த்த அதரத்தையும், மந்தரமனைய தோளையும், கரியின் கரமெனும் கைகளையும், பத்மமொத்த பாதங்களையும், மதனனும் மங்கையாக விரும்பும் மேனியையும், நான் கண்ணாரக்கண்டு கருத்தாரக் கருதின பிறகு, அவ்வுருவத்தை நான் கனவிலும் கருதுவேனோ? அம்சத்தைக் கண்டபின் காகத்தை விரும்புவதோ? கோடி சூரியப்பிரகாசத்தைப் பார்த்தபின்பு இருளை இச்சிப்பதோ? சீ! இது என்னெதிரில் இருப்பதும் நியாயமன்று. [நரேந்திரன் படத்தைக் கிழித்தெறிகிறாள்.] விதியே! விதியே! சீ! துரதிர்ஷ்டமே ஒருருவெடுத்து சித்திராங்கியாகப் பிறந்திருக்கவேண்டும்!—சீக்கிரம் வருகிறேனென்று சொல்லிவிட்டுப்போன எனது பிரியசகி மதனிகை, ஏன் இன்னம் வரவில்லை? ஐயோ! போதாக்குறைக்கு இதுவொன்றா? என் துரதிர்ஷ்டம் என் பிராணநாதரையும் சூழவேண்டுமோ? என் பொருட்டே, எங்கு அவர் இங்கிருந்தால் என்னை நேரிற் காணும்படி நேரிடுகிறதோ என்றே, இக்கிழவன் தன் மைந்தனை வனவேட்டைக் கனுப்பியிருக்கவேண்டும். பார்ப்போம், இந்த நரேந்திரன் சபதம் தான் பலிக்கிறதோ அல்லது என் சபதந்தான் பலிக்கிறதோ! இது சத்தியம், நான் சாரங்கதரனையாவது கணவனகப் பெறுவேன், அல்லது என் உயிரையாவது மாய்த்துக்கொள்வேன்.—

மதனிகை வருகிறாள்.

மத. அம்மா, உன் விரதம் நிறைவேறும் சமயம் வந்துவிட்டது. சாரங்கதராஜன் பட்டணத்திற்கு வேட்டையை முடித்துக் கொண்டு திரும்பி வந்துவிட்டார்.

சி. எப்பொழுதுவந்தார் என் பிராணநாதர்? ஒரு குறையுமின்றி வந்து சேர்ந்தாரா?

மத. இப்பொழுதுதான் வந்து சேர்ந்தார். நான் சுந்தரகனிட

மிருந்து மெல்ல விசாரித்தறிந்தேன், இப்பொழுது புரூ மண்டபத்தில் இருக்கிறாராம்.

சி. மதனிகா, நான் எப்பொழுதடி என் பிராணநாதரை நேரிற் கண்டு கண்குளிர்வது? உன்னையே நம்பியிருக்கிறேன், நீ தான் ஓர் யுக்தி சொல்லவேண்டும். நான் இத்தனை காலம் பொறுத்ததுபோதும். இனி அவரை நான் விரைவிற் காணு விட்டால் என்னுயிர் நில்லாது.

மத. ஆக்கப்பொறுத்தது ஆறப்பொறுக்கவேண்டாமா? சற்றுப் பொறும், அவசரப்படாதீர்.

சி. அடிபோடி, என் நிலைமை நீ சற்றும் அறிந்தாயில்லை. அறிந்திருப்பாயாயின் இவ்வாறு கூறமாட்டாய். உன் மனந் தான் என்ன கல்லோ? எப்பொழுதாவது, ஒரு புருஷன்மீது நான் காதல்கொண்டிருப்பதுபோல், நீயுங்கொண்டிருந்தால் தெரியுமுனக்கு!—

மத. அப்படியல்ல அம்மா, மஹாராஜாவோ தாம் ராஜகுமாரரை நேரிற் காணவுமாகாதென, மிகவும் ஜாக்கிரதை யாயிருப்பாரினி! அவரறியாவண்ணம் தாம் ராஜகுமாரரைச் சந்திக்கும் வழியறியவேண்டும்.

சி. ஆம், ஆம் உண்மைதான். அதற்கேதாவது விரைவில் வழியைத் தேடு, உனக்கு நான் என்னவேண்டுமென்றாலும் தருகிறேன்.

மத. அம்மா, இளவரசர் எந்நேரமும் சுமந்திரனுடனும் விதூஷகனுடனும் இருக்கிறார். அந்த சுமந்திரனோ மிகுந்த புத்தி கூர்மையுடையவன், அவனைப்பிரித்தே இளவரசரைத் தனிக்கச்செய்து தாம் அவரை ஏகாந்தமாய்க் காணும்படி செய்யவேண்டும்.

சி. ஆம், ஆம்—

மத. அதற்கு முதலில் இந்த விதூஷகனை நமது கைவசப்படுத்த வேண்டும்.

சி. நீ எது வேண்டுமென்றாலும் செய், என்பிராணநாதரை நான் கண்ணாரக்கண்டால் போதும்.

மத. பார்த்தால் போதுமா ? அப்படியே நான் பார்க்கும்படி செய்கிறேன், போதுமா ?

சி. சீ ! உனக்கு விளையாட்டாயிருக்கிறதோ அடி இதெல்லாம் ?

மத. இல்லையம்மா, கோபித்துக்கொள்ளாதீர். நான் உமது கோரிக்கையைச் சீக்கிரம் முடித்து வைக்கிறேன், வருந்தவேண்டாம். சுந்தரகன்.—

சுந்தரகன் வருகிறான்.

சுந். அம்மணி, நமஸ்காரம். மஹாராஜா இங்கு வருவதாகச் சொல்லச்சொன்னார்.

சி. ஐயோ ! நான் என்ன செய்வது, மதனிகா ?

மத. அதற்கென்ன ? இன்னும் விரதம் முடியவில்லை, திரைக்கு வெளியிலிருந்து பேசிப் போகலாம் வழக்கப்படி, என்று சொல் போ.

சுந். மதனிகா—நான்—சொன்ன—விஷயம்—ஏ !—

மத. ஸ் ! இங்குதானா கேட்பது ? பிறகு பேசுவோம் போ.
[சுந்தரகன் போகிறான்.]

சி. அடிதோழி, இக்கிழப்பாவியின் குரலைக்கேட்பதும் எனக்குக் காதில் நாராசத்தை விடுவதுபோ லிருக்கிறது. இன்னும் விரதமுடியவில்லை யென்றுகூறி, நீதான் ஏதாவது போக்குச் சொல்லியனுப்பிவிடு.

மத. ஆகட்டு மம்மா. நீர் வாரும் உள்ளே, சொல்கிறேன்.

[மதனிகை குறுக்காக ஒரு திரையைத் தள்ளிவிட்டுச் சித்திராங்கியை அழைத்துக்கொண்டு உள்ளே போகிறாள். திரைக்கு அந்தப் பக்கமாக நரேந்திரனும் சுந்தரகனும் வருகிறார்கள்.]

சுந். சித்திராங்கியம்மன் உள்ளேயிருக்கிறார்கள்.

ந. மாதே! இன்னும் உன்மனம் இளக வில்லையோ ? இன்னும் எத்தனை நாள்தான் இந்த நோன்பு நோற்கப்போகிறாய் ? உன்னுடைய மனம் என்ன கல்லோ ? ஹஸ்தினபுரத்தையாளும் நரேந்திர பூபதியாகிய நானே, உன்னை வந்து வேண்டியும், நீ சம்மதியாதது என்ன விந்தையோ ? என்னைப்பார்க்கிலும் சிறந்த புருஷனை நீ இவ்வுலகில் பெறுவாயென்னும்

ஆசையை விட்டுவிடு. அப்படிப்பட்ட புருஷன் ஒருவனு மில்லை. என்னை வயோதிகனென்று நினையாதே. என்னை மூப்பு இன்னும் வந்து நன்றாய்ப் பற்றவில்லை. என்ன சொல்லுகிறாய் ? இப்பொழுதாவது ஆகட்டும் என்று ஒரு வார்த்தை கூறி என் மனத்தைச் சந்தோஷிக்கச் செய்யமாட் டாயா ? சாரங்கதரனமீது நீ காதல் கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன், அவனோ புத்திஹீனன், அவலட்சண முடையவன். உனக்கு அனுப்பிய படம் அவனுடைய தென்று நீ ஏமாந்திருக்கிறாய்போலும்; அது அவனுடைய தல்ல, என்னுடைய படம் அது ; நான் சில வருஷங்களுக்கு முன்பு இருந்த ஸ்திதியில் எழுதிய படமது. சாரங்கதரனை மணம்புரிவாய் என்னும் இச்சையை விட்டுவிடு. அவன் எனக் குட்பட்டவனன்றோ? என் அனுமதியின்றி உன்னை விவாகஞ் செய்து கொள்வானோ ? அதுவுமன்றி ஒரு க்ஷணப்பொழு தில் அவனை இளவரசுப்பட்டத்தினின்றும்நீக்கிவிட்டு அனுதை யாய்க் கானகத்தில் துரத்திவிட எனக்குச் சக்தியில்லையோ ? என்ன சொல்கிறாய் ? கண்மணி, என் மனம் குளிர ஒரு வார்த்தையேனும் பேசாயோ ? என் கண்குளிர ஒருமுறை யேனும் உன்னை நான் பார்க்கலாகாதோ ? என்னசும்மாவிருக் கிறாய் ? சாதாரணமாக என்னுடன் பேசுவாயே, அதனையும் இன்று விட்டனையே !—மதனிகா, உன்தலைவி என்ன சொல் லுகிறாள் ? நீயாகிலும் கேட்டுச்சொல் என்னிடம். என்ன நீயும் சும்மா இருக்கிறாய் ?—

சுந். மஹாராஜா, சித்திராங்கிதேவி பேசாதிருப்பதால் மனம் இளகி யிருக்கிறதுபோலத் தோற்றுகிறது. பெண்பால், நாம் கேட்டதற்குப் பதில் கூறாவிட்டால், சம்மதி என்று அர்த்தம். சுகீபவ! நெடுநாள் சுகமாய் வாழ்வீராக ! மஹா ராஜா, தயவிருக்கவேண்டும். நான் அப்பொழுதே சொன் னேனே, அந்த மதனிகையைக்கொண்டு சரிப்படுத்தி விடுகி றேன் என்று; எப்படியாவது அந்த மதனிகையை எனக்கு விவாகஞ்செய்து வைத்துவிடவேண்டும்.

ந. அதற்கென்ன? அப்படியே ஆகட்டும்—சித்திராங்கி ! என் கண்மணியே! காதற்கிளியே ! உன் மனமிளக இத்தனை காலம் சென்றதா ? இப்பொழுதுதான் நான் பாக்கியவா

ஞனேன், இன்றே என் ஜன்மம்சபலமாயது !—திரையைத் திறந்து உன் மதியைவென்ற வதனத்தைக்கண்டு மகிழலாமா நான் ?

சுந். சரி ! சும்மா இருக்கிறார்கள் ! தீர்ந்துவிட்டது. கேட்டதற் குப் பதில் கூறாவிட்டால் சம்மதிதான் !—

ந. கண்மணி !—[திரையைத் தள்ளி உள்ளே ஒருவருமில்லாததைக் கண்டு] என்ன ஒருவரையும் காணேம் ! சுந்தரகா ! என்னை ஏமாற்றினையா என்ன ?—

சுந். மஹாராஜா ! இப்பொழுது இங்கு தான் இருந்தார்களே ! என் கண்ணுற் பார்த்தேனே !—

ந. ஏளனமா செய்கிறாய் ? உனக்குத்தக்க தண்டனை விதிக் கிறேன்! [கத்தியை உருவுகிறான்.]

சுந். மஹாராஜா ! மஹாராஜா ! என்மீது குற்றமில்லை ! குற்ற மில்லை ! இதோ மதனிகையைக் கேட்டுப் பாரும்.—

மதனிகை வருகிறாள்.

ந. மதனிகா ! எங்கே உன் தேவி ?

மத. ஐயோ பாவம் ! மஹாராஜா, முதலில் விதூஷகரைவிட்டு விடும், சொல்லுகிறேன்.—சித்திராங்கிதேவி நோற்றுவரும் நோன்பில் இது கடைசி மாதமாகையால் இம்மாதத்தில் புருஷன் முகத்தையே பார்க்கலாகாது, அவரது குரலையுங் கேட்கலாகாது, அதனுல் நீர் வருவதாகக் கேள்விப்பட்டு உள்ளே சென்றார்கள். ஆகவே மஹாராஜா, இன்னும் ஒரு மாதம் வரையில் தாம் இங்கு வரலாகாதென்று சொல்லி வரச் சொன்னார்கள் என்னை.

ந. ஆனல் பொய்மொழி கூறியா என்னை இங்கு சுந்தரகன் அழைத்துவந்தான் ?—மதனிகா, அந்த ஒரு மாதத்தின் பிற காவது என் வேண்டுகோளுக்கிசைந்து என்னை மணம் புரியத் தடையில்லையே ?

மத. மஹாராஜா, நான் அப்பொழுதே உமக்குக் கூறியிருக்கிறே னே, அதற்கு நானிருக்கிறேன். நீர் ஒன்றும் அஞ்சவேண் டாம். அதற்குள் எப்படியாவது மனத்தை திருப்பி விடு

கிறேன் பாரும். அதுவரையில் தாம் சற்று ஒதுங்கியே யிருக்கவேண்டும்.

ந. சரிதான். மதனிகா, நான் வருகிறேன். நான் கூறியது ஞாபகமிருக்கட்டும். [போகிறான்.]

சுந். அம்மா! என்னைக் கலியாணம் செய்துகொள்ளாமற் போனாற் போகிறது, சும்மா உயிருடன் விட்டுவிட்டாற் போதும்!

மத. சே! இவ்வளவுதானா உமது புத்தி? என்னுடைய உட்கருத்தை அறியவில்லையே. உம்முடைய உயிரை நான் காப்பாற்றவில்லையா?

சுந். ஆம், ஆம்! காப்பாற்றினாய்!—

மத. நான் சொல்லுகிறபடியெல்லாம் நீர் நடந்துவந்தால் உமது வேண்டுகோளுக்கு நான் இசைவேன். என்ன சொல்லுகிறீர், உம்?

சுந். அப்படியே ஆகட்டும், கேட்பானேன்?

மத. முதலில் சித்திராங்கிதேவி எப்படியாவது சாரங்கதர ராஜனைத் தனியாகக் காணவேண்டும். அது உம்மால் தான் ஆகவேண்டும். என்ன சொல்லுகிறீர்?

சுந். ஐ ஐயோ! இளவரசர் சித்திராங்கியைப் பாராவண்ணம் பார்த்துக்கொள்ளும்படி யல்லவோ மஹாராஜா எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார். நான் இக்கட்டளையை மீறி நடப்பேனாயின் மஹாராஜாவுக்கு இப்பொழுதிருக்கிற கோபத்திற்கு எனக்கு சிரசாக்கினை விதித்துவிடுவாரே! இது என்னால் முடியாது.

மத. ஆனால் அப்படி மஹாராஜாவின் கட்டளைப்படி நடப்பதாயிருந்தால், போய் மஹாராஜாவைக் கலியாணம் செய்துகொள்ளும், போம்!

சுந். மதனிகா, அப்படியல்ல. அப்படிச் சொல்லிவிடாதே! மஹாராஜா அறியாதபடி இக்காரியத்தை நாம் நிறைவேற்றவேண்டுமென்றேன், வேறொன்றுமில்லை. இப்பொழுதென்ன செய்யவேண்டும்?

மத. நீர் சென்று மெல்ல ராஜ குமாரனை உத்தியானவனத்திற்கு

அழைத்துவாரும், ஏதாவது போக்குச் சொல்லி. பிறகு செய்யவேண்டிய காரியங்களை அப்புறம் சொல்லுகிறேன்.

சுங். உத்தரவுப்படி, நீ கூறியது ஞாபகமிருக்கட்டும். [போகிறான்.]

மத. விதூஷகனுகிய இவனது புத்தியெல்லாம் என்னைக் காணும் பொழுது எங்கேயோ பறக்கிறது. மோகவலையில் அகப்பட்டால் மழுங்கும் புத்தியென்பது உண்மைதான். இல்லாவிடின் இவன் என்னை இச்சித்து இவ்வாறு புத்திகெட்டு நடப்பதாவது! ஆயினும் நமக்கு உபயோகப்படுகிறான். அதுதான் நமக்கு வேண்டியது. [போகிறாள்.]

---

## நான்காங் காட்சி.

இடம்—நந்தவனம். காலம்—மாலை.

சித்திராங்கி வருகிறாள்.

சி. ஆ! என்ன ரமணீயமாயிருக்கிறது இந்த நந்தவனம்! தென்றல் மெல்லென இங்குள்ள பாரிஜாதம், சண்பகம், நீலோற்பலம், முதலிய நறுமலர்களின் வாசனையை எங்கும் பரவச்செய்ய, தெளிந்த நிலவு சோலையெங்கும் தன்னிறத்தாக்கி எவ்வெப் பொருள்களையும் இனிமையாய்த் தோன்றச்செய்ய, அன்றில் தன் பேடை நாட, இவைகளை யெல்லாம் பார்க்கும் பொழுதும் கேட்கும்பொழுதும், நினைக்கும்பொழுதும், எனக்குள்ள காதல் மேன்மேலும் அதிகரிக்கிறதே யொழியக் குறைந்த பாடில்லை. ஐயோ! நான் என்ன செய்வேன்? ஐயோ! ஜகதீசனே! இப்படியும் என்னைத் தனித்தலைய விடுவாயோ இப்பருவத்தில்? இவ்விளமை போயினபின் எனக்குச் சுகம் கிட்டி எதற்கு?—இன்னும் ஏன் எனது தோழி வரவில்லை? போன இடத்தில் காரியம் கைகூடுகிறதோ என்னவோ? ஐயோ! என்னுயிர் தாமரை யிலையிற் பட்ட நீர்த்துளியைப்போல் தத்தளிக்கிறதே! இன்று எப்படியாவது நான் பிராணநாதனைக் காணவேண்டும். காணவிட்டால் என்னுயிர் நில்லாது.—அதோ மதனிகை வருகிறாள்! மதனிகா! மதனிகா!!—

மதனிகை வருகிறாள்.

ந. அம்மா, காலெல்லாம் என்ன நோகிறது!

சி. அதிருக்கட்டும், ராஜகுமாரர் இங்கு வருகிறாரா இப்பொழுது?—

மத. அப்பா! இச்சோலை என்ன அழகாயிருக்கிறது! என்ன சுகந்தம்!—

சி. மதனிகா, என் பிராணநாதர் இங்கு வருவாரோ இப்பொழுது?

மத. என்ன அவசரமடி யம்மா! வந்த நான் இளைப்பாற வேண்டாமா? ஸ்!—சில்லென்று இத்தென்றல் வீச, சந்திரன் ஒளி எங்கும் பரவச்செய்ய—

சி. சீ! மதனிகா, இந்த வர்ணனை யெல்லாம் இப்பொழுது தானோ? உனக்கேனடி என்மீது பரிதாபம் என்பது சற்று மில்லை? போன காரியத்தில் ஜெயித்து வந்தாயா? சொல்லடி சீக்கிரம்.

மத. இதோ சொல்கிறேனம்மா! அங்கே போன இடத்தில் ராஜ குமாரர் தன் தாயாருடன் பேசிக்கொண்டிருந்தார். அந்த ரத்னாங்கி தேவி மிகவும் சற்குணமுடையவளென்று நினைக்கிறேன். உனக்கெப்படித் தோன்றுகிறது?

சி. சீ! போடி! இவைகளையெல்லாம் உன்னை யார் கேட்கச் சொன்னது? மஹாராஜாவிடம் கூறி உன்னை அரண்மனையி னின்றும் நீக்கிவிடச் சொல்லுகிறேன் பார்—

மத. பிறகு நீ ராஜகுமாரரைப் பார்க்கலாம்!

சி. இல்லையடி! என்மீது கோபங்கொள்ளாதே! ஏதோ அவசரத்தில் மொழிந்தேன்! தயைபுரிந்து ராஜகுமாரர் வருகிறாரா என்ன, சொல்.

மத. இதோ சீக்கிரத்தில் இவ்விடம் வருவார். ஆனால் அவருடன் ரத்னாங்கி தேவியும் சுமந்திரனும் வருவார்கள் போ லிருக்கிறது.—

சி. அவர்களை யார் வரச்சொன்னது?

மத. நாம் வரச்சொல்லவேண்டுமோ? அவர்களாக வருகிறார்கள்; ஆயினும் பயப்படவேண்டாம். ராஜகுமாரரைத் தனிக்கச் செய்து உன்னைச் சந்திக்கச் செய்கிறேன்—அதோ வருகிறார்கள். நாம் மறைவிடத்தி லிருப்போம்—

சி. மதனிகா, நீயே என் மனதுக்கிசைந்த தோழி !—

ம. ஆம், சரிதான் வாரும். [ஒரு புறமாய்ப் போகிறார்கள்.]

ரத்னாங்கி, சாரங்கதரன், சுமந்திரன், சுந்தரகன், மதுரகவி, தோழி வருகிறார்கள்.

ர. சாரங்கதரா, என்று மில்லாவண்ணம் நமது பூஞ்சோலை இன்று எவ்வளவு அழகாய்த் தோன்றுகிறது பார்த்தாயா ! இச்சந்திரனொளியினால் எவ்வளவு ரம்மியமாகத் தோன்று கிறது எல்லா வஸ்துக்களும் !

சா. அம்மணி, சுவாமியினுடைய அருளைப் பெற்றவர்களெல்லாம் அற்பர்களானாலும், எப்படி மேன்மை யடைகிறார்களோ, அவ் வாறே இவ்விடத்திலுள்ள ஒவ்வொரு அற்பப்பொருளும் சந் திரனொளியால் மேம்பட்டு விளங்குகிறது !

ர. ஐயோ ! இவைகளையெல்லாம் பார்க்கும்பொழுது இச்சமயத் தில் மஹாராஜா நம்முடனில்லையே இச்சந்தோஷத்தை யனு பவிக்கவென்று எனக்கு வருத்தமா யிருக்கிறது !

சா. இவ்வளவு அழகாக நிலவு வீசும்பொழுது சுமந்திரனுடன் பட்டணத்தைச் சுற்றிக் குதிரைப் பந்தயம் விடுவதற்கில்லையே யென்று ஏங்குகிறது என் மனம்.

சுந். ஐயோ ! என்னுடைய மனத்தைச் சொல்லவா ? இவ்வளவு அழகாயிருக்கிறதைப் பார்த்தால், ஐயோ ! இந்தச் சமயத்தில் ஒரு வெள்ளித் தாம்பாளத்தில், பத்துபோளி, இருபதுவடை, முப்பது தோசை, நாற்பது சோமாசு, இப்படிப்பட்டதெல் லாம் வைத்துக்கொண்டு தின்பதற்கில்லையே யென்று வருத்த மாயிருக்கிறது ! [எல்லோரும் நகைக்க] உங்களுக்கெல்லாம் சிரிப்பாயிருக்கிறது ! என் வருத்தம் எனக்குத் தெரியும். அதை நினைத்தாலே என் நாவில் நீர் ஊறுகிறது !— என்னையா சொல்கிறீர் கபிராயரே ?

ம. எனக்கென்ன தோன்றுகிறது, எங்கள் தகப்பனார் ஒருமுறை இதைப்பற்றி கூறியிருக்கிறார்—

சுந். ஒழிந்தது ! உங்கள் புஸ்தகத்தை இங்கே அவிழ்க்காதீர்கள், போதும்—

சா. வீண் வார்த்தை ! சுமந்திரா, வருகிறாயா பட்டணத்தைச்

சுற்றிக் குதிரைப் பந்தயம் விடுவோம்? நான் உன்னைத் தோற்கடிக்கிறேன், என்ன பந்தயம்?

ர. சாரங்கதரா, இன்னும் உனக்குப் விளையாட்டுப் புத்தி போகவில்லையே, ராத்திரியில் குதிரைப் பந்தயம் விடுவார்களா? வேண்டாம். எப்பொழுதுதான் இச்சிறுபிள்ளைக் குணம் போமோ?

சா. நான் சாகுமளவும் போகாதிருக்கவேண்டுமெனக் கோருகிறேன் அம்மணி. அம்மா, இவ்விளமையிலன்றோ வேடிக்கையாய் அனுபவிக்கவேண்டிய வினோதங்களையெல்லாம் அனுபவிக்கவேண்டும். இளமை நீங்கி முதுமை வந்தால் பிறகாகுமோ? அல்லது இளமை மறுபடியும் வருமோ? இப்பொழுதனுபவியாது பின்பு பிணி மூப்பு நரை திரை வந்தெய்திய பின்னர், இளமையில் அனுபவிக்கவில்லையேயென்று வருந்தியாவதென்ன? அதுவுமன்றி நாம் இவ்வுலகில் நெடுநாள் ஜீவித்திருப்போமென்னும் நிச்சயமென்ன? உடல் உயிருடன் இருக்கும்பொழுதே, ஈசன் நமக்கருளிய, அனுபவிக்கவேண்டிய பொருள்களையெல்லாம், நாம் அனுபவித்து முடித்துவிடவேண்டும். சுமந்திரா, எழுந்திரு.

ர. சாரங்கதரா, வேண்டாம், பொறு, இளவயதாகையால் உனக்கு பயமென்பது சிறிதும் இல்லை. இப்பொழுது வேண்டாம்.

ம. ஆமாம், அம்மணி. எங்கள் தகப்பனார் சொல்லியிருக்கிறார்— “பயங்கன்று இளமறியா” தென்று.

சுந். அடடே! இழவு! சொல்வதை சரியாகச் சொல்லியழும், “இளங்கன்று பயமறியாது” என்று.

ம. அப்படித்தானே சொன்னேன் “கயம்பன்று இளமறியாது” என்று.

சுந். தீர்ந்தது! இன்னொரு முறை சொன்னால் அனர்த்தமாய் முடியும், போதும்!

ர. சாரங்கதரா, உன்னுடைய விளையாட்டுக் குணத்தையெல்லாம் சீக்கிரத்தில் அடக்க வழி தேடுகிறேன் பார். உனக்கு விவாகஞ் செய்யத் தீர்மானித்திருக்கிறேன்—

சா. அம்மணி! அம்மணி! அந்தச் சமாசாரம் மாத்திரம் எடுக்காதீர்! வேறு எந்த விஷயம் வேண்டுமென்றாலும் பேசும். எனக்

காவது இப்பொழுது விவாகஞ் செய்வதாவது ! வேண்டாம் அம்மணி !

ர. ஆனல் எப்பொழுதும் விவாகஞ்செய்துகொள்ளாது காலம் கழித்துவிடப் போகிருயோ ?

சா. அப்படியல்ல, நான் வேண்டியபொழுது விவாகஞ் செய்து கொள்ளுகிறேன்.

ர. ஆனல் நான் உயிருட னிருக்கும் பொழுதே உனக்கு விவாகஞ் செய்து கண்குளிர வேண்டாமா ?

சுங். அம்மணி, வேண்டாதவரை வற்புறுத்துவானேன் ? நான் காத்துக்கொண்டிருக்கிறேன். எனக்கு விவாகஞ் செய்து பார்க்கிறதுதானே ?

சா. ஆம், அப்படிச் செய்யும் அம்மணி.

ம. எங்கள் தகப்பனர், எனக்குமொரு விவாகம்—

சா. ஆம், சரி ! அம்மணி, இவர்களிருவருக்கும் விவாகஞ்செய்து விடும் !—

மதனிகை வருகிருள்.

மத. அம்மா, தங்களை மஹாராஜா பார்க்கவேண்டுமென்று சொல்லும்படி கட்டளையிட்டார்.

ர. மஹாராஜாவா ? எதற்காக ?—ஏதோ விசேஷமிருக்கவேண்டும். சாரங்கதரா, இங்குதான் இரு, நான் போய் வருகிறேன்.—எங்கிருக்கிருர் மஹாராஜா ?

மத. ஜகன்மோகன மண்டபத்தி லிருக்கிருர்.

ர. தனியாக இருக்கிருரோ, அல்லது—

மத. இல்லை, தனியாகத்தா னிருக்கிருர். [ரத்னங்கி போகிருள்.]

சுங். மதனிகா, ஏது, இந்தப்புறம் திரும்பியது ?

மத. விசேஷமொன்றுமில்லை. சித்திராங்கிதேவி சுமந்திரரைப் பார்க்கவேண்டுமென்று சொல்லும்படி இங்கனுப்பினர்கள். அதைக்கூற இங்கு வந்த சமயத்தில், இடையில் மஹாராஜா கண்டு ராஜபத்னியைக் காணவேண்டுமென்று ஆக்யாபித்தார்கள், ஆகவே—

சும. மதனிகா, என்னையா சித்திராங்கிதேவி காணவேண்டுமென்று கூறினர்கள்?

மத. ஆம்.

சும. எதற்காக?

மத. எனக்குத் தெரியாது.

சா. சுமந்திரா, நான் இங்குவந்த பிறகு எனது சிற்றன்னையிடம் சென்று கண்டுகொள்ளவில்லை. நானும் உன்னுடன் வருகிறேன்.

சும. அரசே, இந்தச் சமயம் வேண்டாம்; நாளைத்தினம் காலையில் நீர் போய்க் காணலாம். என்னை மாத்திரம் அழைத்திருக்கும் பொழுது தாம் வருவது நியாயமன்று. நான் போய் என்ன வென்று விசாரித்துவிட்டுத் தாம் எப்பொழுது வந்து பணியலாமென்றும் கேட்டுவருகிறேன் தாம் இங்குதானே இரும். மதனிகா, சித்திராங்கிதேவி எங்கே இருக்கிறார்களிப் பொழுது?

மத. நான் வரும்பொழுது வசந்தமண்டபத்திற்குச் சென்றார்கள்.
[சுமந்திரன் போகிறான்.]

சா. மஹாராஜா எதற்காக என் அன்னையை அழைத்தார்? சில தினங்களாக அவர்களுடன் பேசுவதில்லை என்று கேள்விப் பட்டேன்; என்ன விசேஷமோ தெரியவில்லை.

[மதனிகை சுந்தரகனுக்குச் சைகை செய்கிறாள்.]

சுந். அரசே, நான்போய் மெல்ல விசாரித்து வருகிறேன் பாரும் எல்லா விஷயங்களையும். வாருமையா மதுரகவி நீரும்.
[இருவரும் போகிறார்கள்.]

மத. ராஜகுமாரா, மஹாராஜா தம்முடைய தாயாரை அழைத்தது.

சா. எதன்பொருட்டு தெரியுமா உனக்கு?

சித்திராங்கி வருகிறாள்.

மத. [ஒரு புறமாக] இதற்குள்ளாக அவசரமா?

சி. மதனிகா, உன்னை நான் எங்கெங்கு தேடுவது?

மத. ராஜகுமாரா, தாம் போகவேண்டியதில்லை. இவர்கள் தான் சித்திராங்கியம்மன்.

சா. அப்படியா? அம்மணி, நமஸ்காரம், நான்தான் சாரங்கதரன். நாட்டைவந் தடைந்த பின்னர், இதுவரையில் தம்மை வந்து கண்டு தமது ஆசிபெற்றுச் செல்லாத குற்றத்தை மன்னிக்க வேண்டும், அம்மணி.

சி. ராஜகுமாரா, இதென்ன விந்தையாயிருக்கிறது! தாம் என்னை "அம்மணி" என்று அழைக்கிறீரே!

சா. அம்மா! எனது சிற்றன்னையை நான் வேறு எப்பெயரிட்டு அழைப்பது?

சி. ராஜகுமாரா, என்ன ஒன்றும் அறியாதவர்போற் பேசுகிறீர்? நான் உமக்கெப்படிச் சிற்றன்னை? உமது தாயாருடைய தமக்கையோ அல்லது தந்தையின் மனைவியோ?

சா. மதனிகா, என் தந்தை சித்திராங்கி தேவியை மணந்ததாகக் கூறினரே?

மத. மணஞ்செய்துகொள்ள விரும்புகிறாரேயொழிய வேறன்று விவாகம் புரிய விரும்பினால் மனைவியாய் விடுவதோ? என்ன ஒன்றும் தெரியாதவர்போல் வார்த்தையாடுகிறீரே?

சா. அம்மா, இவ்விஷயமெல்லாம் எனக்கு நன்றாய்த் தெரியாது.

சி. என்ன மறுபடியும் என்னை அம்மாவென் றழைக்கிறீர்? இவ்வளவு கூறியும் உமக்குத் தெரியவில்லையே! எப்படி யிருந்தபோதிலும் நான் உமக்கு இளையவள்தானே!

சா. ஆயினுமென்ன? எப்பொழுது என் பிதா உம்மை மணம்புரி யத் தீர்மானித்தாரோ அப்பொழுதே எனக்குச் சிற்றன்னை யாய் விட்டீர்கள். ஆதலால் நான் தங்களை அம்மாவென்றே அழைப்பது முறை.

சி. நான் உம்முடைய வயோதிகராகிய பிதாவை மணஞ்செய்து கொள்ளாவிட்டால்?

சா. ஏன் விவாகஞ்செய்து கொள்ளலாகாது? இப்பூமண்டலத் திற்கெல்லாம் அதிபதி, ஹஸ்தினபுரத்து மன்னன், தொன் மையான சந்திர குலத்துதித்த வள்ளல்! இவரைப் பார்க்கி லும் உமக்குத்தக்க புருஷன் எங்கு கிடைக்கப் போகிறார்?

சி. ராஜகுமாரா, என்ன விந்தை! இக்கேள்விகளை யெல்லாம் தாம் என்னெதிரில் நின்றுகொண்டு கேட்கிறீரே! என்மனத் தைப் பரிசோதிக்கிறீரோ?— உம்முடைய பிதாவைப் பார்க் கிலும் சிறந்த புருஷன் எனக் கொருவர் இருக்கிறார்.— அவரையே நான் கடிமணம் புரியப்போகிறேன்.

மத. அப்புருஷனைப் பெறவே இந்தப் பதினொரு மாதமாக நோன்பு நோற்று வருகிறார்கள்.—

சா. அம்மா, என் பிதாவைப் பார்க்கிலும் மேலான ஸ்திதியில் இருக்கும்படியான புருஷனும் இப்பூமண்டலத்தில் உளனோ?

மத. ராஜகுமாரா, கைநிறைந்த பொருளைப் பார்க்கிலும் கண் நிறைந்த புருஷனையே பெண்கள் விரும்புவாரென்பதை மறந்தீரோ?

சி. யௌவனத்தைவிட்டு வயோதிகத்தை விரும்புவரோ?

மத. அழகைவிட்டு அவலக்ஷணத்தின்மீது ஆசைப்படுவரோ?

சி. மதனைவிட்டு மந்தியைக்கண்டு மயங்குவரோ?

மத. மாரனைவிட்டு மாறனை மதிப்பாரோ?

சா. இது என்ன இது?

சி. மதனிகா, ராஜகுமாரர் அறிய நடந்த விஷயங்களை நன்றாய் எடுத்துரை.

மத. ராஜகுமாரா, உம்முடைய பிதா ஒரு படத்தை யனுப்பி சித்திராங்கத ராஜனிடம் பெண் பேசும்படி தூதர்களை விடுத்தனர். அப்படத்தைக்கண்டு சித்திராங்கத ராஜனும் இதோ நிற்கும் சித்திராங்கி தேவியும் சம்மதிகக, பிறகு விவாகம் நடந்தேறும் பொருட்டு, உமது பிதா சித்திராங்கியை இங்கு வரவழைத்தனர். இங்கு வந்த பின்பு சித்திராங்கியைக் கண்டு தானே மணம்புரிய வேண்டுமென்று விரும்பி, பலாத்காரம் செய்யத் தொடங்கினர். அதற்கிசையாது எமதுதேவி சிலகாலம் நோன்புநோற்க வேண்டுமென்று போக்குச்சொல்லி வருகிறார்கள்—

சி. மதனிகா! மதனிகா! அதோ என் கிள்ளை உணவின்றி வருந்திக் கத்துகிறது! நான் இன்று அதற்கு உணவிட மறந்தேன். நீ உடனே சென்று அதற்கு உணவிட்டுவா.

சா. [தனக்குள்] சீ! இப்படி நமது பிதா ஒருகாலும் செய்திருக்க மாட்டார்கள்! அவர் சூது செய்வாரோ? இதில் ஏதோ விசேஷமிருக்கவேண்டும். இதனுண்மையை அறிய வேண்டும்.

மத. அம்மணி, நான் வருகிறேன். [போகிறாள்.]

சி. ராஜகுமாரா, அப்படம்—உம்முடைய பிதா எனக்கனுப்பிய படம்—யாருடையதென்று நினைக்கிறீர் நீர் ?

சா. எனக்கொன்றும் நன்றாய் விளங்கவில்லை யம்மா—

சி. உம்முடையதே !

சா. என்னுடையதா? அப்படியிரா தம்மணி!—ஏதோ நீர் தவறாகப் பார்த்திருக்கவேண்டும். அல்லது ஞாபகமில்லாது என் படத்தை யனுப்பியிருக்கவேண்டும். பிதா வேண்டுமென்று அனுப்பியிருக்கமாட்டார்.

சி. எப்படி யனுப்பியிருந்தாலு மென்ன ?

சா. உம்முடைய சந்தேகம் நிவர்த்தியாகும்பொருட்டு நான் போய் எனது தாயாரைக் கேட்டு வருகிறேன்.

சி. ராஜகுமாரா, என்னைத் தனியாக விட்டுச் செல்லாதீர் ! என் தோழியும் போய்விட்டாள். எனக்கு யார் துணை யிங்கு ?

சா. அம்மணி, உமக்கிங்கு என்ன பயம் ? மஹாராஜாவினுடைய உத்தியானவனத்தில் யார் உமக்குத் தீங்கு செய்யப் போகிறார்கள் ?

சி. என்னுடைய பகைவரை நீர் அறியீரோ? இப்பொழுது அவர்களால் நான் படுந்துயரம் உமக்கு உண்மையில் தெரியாதோ, அல்லது என் மனத்தைப் பரிசோதிக்கிறீரோ ?

சா. அம்மா, விளையாடுகிறீரா என்ன? உம்மை யார் இப்பொழுது வருத்துவது ?

சி. அநங்கன்—வருத்துகிறான்.

சா. அநங்கன்!—அங்கமில்லாதவன்!—அங்கமில்லாதவன் வருத்துவதாவது? நான் வருகிறேன் அம்மணி.

சி. ராஜகுமாரா, இச்சமயத்தில் பெண் பேதையாகிய என்னை நீர் இரக்கமின்றித் தனியே விட்டுச் செல்வது நியாயமா? தோழி வருகிறவரையிலாவது இங்கிரும்.

சா. அப்படியே ஆகட்டும்.

சி. [தனக்குள்] மனமே! அதைரியப்படாதே ! வண்டு முகராத் தேனிது ! எப்படியும் நீ பெறலாம் !

சா. போன சுமந்திரன் ஏன் இன்னும் வரவில்லை ?

சி. அவைகளையெல்லாம்பற்றி இம்பொழுது யோசிப்பானேன்? ராஜகுமாரா, இவ்வழகிய நந்தவனத்தில் நிலவுகாய, பாரிஜாதம், முல்லை, மல்லி, ரோஜாமுதலிய நறுமலர்ப் புஷ்பங்களெல்லாம் மணங்கமழ, தென்றல்வீச, பட்சிகளெல்லாம் தங்கள் பேடுகளுடன் சந்தோஷமாய்க் கூவிக்குலவ, என்ன அழகாயிருக்கிறது! இவைகளை யெல்லாம் பார்க்கும்பொழுது உமக்கு எதன்மீது செல்கிறது மனம்? உமது மனம் ஒன்றையும் நாடவில்லையா?

சா. என்ன கேட்டீர் அம்மணி? என்னுடைய தாயாரும் இதே கேள்வி கேட்டார்கள்.

சி. ராஜகுமாரா, என்னையேன் மறுபடியும் மறுபடியும் 'அம்மணி, அம்மணி' என்றழைக்கிறீர்? நான் தான் நியாயமெல்லாம் எடுத்துக் கூறினேனே?

சா. நான் அந்த நியாயங்களையெல்லாம் ஒப்புக்கொள்ளவில்லையே!

சி. ஒப்புக்கொள்ளா விட்டாலும் ராஜகுமாரி யென்றுவது அழையுமே.

சா. அம்மா, அப்படி அழைக்க எனக்கிஷ்டமில்லை.

சி. அப்படியே ஆகட்டும்; உமக்கெது இஷ்டமோ அதுதான் எனக்கும் இஷ்டம். ராஜகுமாரா, இன்னும் எனது தோழி வரக்காணோம். சற்று நாம் இந்த நந்தவனத்தி னழகைச் சுற்றிப்பார்த்து வருவோமா? வாரும்—ராஜகுமாரா! அம் மல்லிகை அப்பாரிஜாதத்தைத் தழுவி நிற்றல் கண்டீரா! என்ன அழகாயிருக்கிறது! ஓர் அழகிய மங்கை தன் காதலனைத் தழுவி நிற்பது போலன்றோ இருக்கிறது!

சா. ஜகதீசன் தன்னை அடைக்கல மென்றடைந்தவனைத் தாங்குதல் போலத் தோன்றுகிறதெனக்கு.

சி. இவ்வளவுதானா? எனக்கு அம்மல்லிகையைப் போல நானும் எப்பொழுது—என் காதலனுடன் சந்தோஷித் திருப்பேனோ என்று என் மனம் வாடுகிறது.

சா. ஏன் அம்மணி? மஹாராஜாவைச் சீக்கிரம் விவாகம்செய்து கொள்ளுகிறதுதானே?

சி. ராஜகுமாரா, நீர் என்னை இப்படிப் பரிஹாசம் செய்வது நியாயமன்று!

சா. நான் பரிஹாசம் செய்யவில்லை அம்மணி!

சி. "அம்மணி, அம்மணி" என்றழைக்கிறீரே அது ஒன்றே போதாதோ? இது உமக்கடுக்குமா? அதோ பாரும், அந்த ஆணன்றில் தன் பேடுடன் என்ன கொஞ்சி முத்தமிடுகிறது! அவ்வன்றிலுக்கு இருக்கும் பட்சமும் உம்மிடத்தில்லையே.

சா. அன்றில் பட்சியா அது? என்ன விந்தையாய்க் கூண்டுகட்டியிருக்கிறது! அம்மாதிரி மனிதனும் கட்ட முடியாது. என்ன ஆச்சரியம்! அந்த அற்பப் பட்சிக்கும் அத்தனை அறிவு கொடுத்திருக்கிறாரே பரமாத்மா!

சி. நான் ஒன்று கூறினால் தாம் வேறு எதையோபற்றி யோசித்துக் கொண்டிருக்கிறீரே! இப்படித் தாம் என்னை வருத்துவது நியாயமன்று.

சா. என்ன அம்மணி கூறினீர்? நானா வருத்துகிறேன்? நான் என்ன செய்கிறேன் உமது மனத்திற்கு விரோதமாக?

சி. என் மனத்திற் கினிப்பாகச் செய்யாமலிருக்கிறீரே, அது தான் தவறு—

[சாரங்கதனருகிற் செல்கிறாள். உள்ளிருந்து "அம்மா அம்மா" என்று மதனிகை அழைக்கிறாள்.]

மதனிகை வருகிறாள்.

சி. [ஒரு புறமாக] மதனிகா, உன்னை இவ்வளவு சீக்கிரத்தில் யார் வரச்சொன்னது?

ம. [ஒரு புறமாக] மன்னிக்கவேண்டும் அம்மணி! ராஜகுமாரரைத் தேடிச் சுமந்திரர் வருகிறாரென்று அவரிடம் கூற வந்தேன்.

[சித்திராங்கி வேகமாய்ப் போகிறாள், மதனிகை ஒரு புறமாக மறைந்து நிற்கிறாள்.]

சுமந்திரன், ரத்நாங்கி, சுந்தரகன், மதுரகவி வருகிறார்கள்.

சா. சுமந்திரா, உனக்கித்தனை நாழிகை பிடித்ததா இங்கே திரும்பி வர? அம்மா, என்ன சமாச்சாரம் போயிருந்தீரே?

ர. எல்லாம் நல்ல சமாசாரம்தான். உனக்குச் சாளுவதேசத்

தரசன் புதல்வியை விவாகஞ்செய்யத் தீர்மானித்திருக்கிறோம் உன் பிதாவும் நானும்—

சா. என்ன ! சாளுவதேசத்தரசன் புதல்வியையா ! அவளை ஒரு காலும் நான் விவாகஞ் செய்துகொள்வதில்லையென்று நான் பிரமாணிக்கம் செய்திருக்கிறேனே ! அம்மணி, என்னைக் கொன்றாலும் சாளுவனுடைய பெண்ணை நான் மணம் புரியேன், இது சத்தியம்.

ர. ஐயோ ! அப்படிக் கூறினால் மஹாராஜா கோபங்கொள்ளுவாரே, என்ன செய்வது ?

சா. நானே இவ்விஷயத்தை மஹாராஜாவிடம் போய்ச் சொல்லிவிட்டுவருகிறேன். பந்தயம் வைத்துத் தோற்றுப்போய்க் கொடேன் என்ற அரசன் பெண்ணையா நான் விவாகம் செய்துகொள்வது ? எனக்கு விவாகமே வேண்டாம் ! [விரைந்து போகிறான்.]

ர. ஐயோ ! நான் சொல்வதைக் கேள். [பின் தொடர்கிறான்.]

சும. இதென்ன? சங்கடமாய் முடியும் போலிருக்கிறது! [பின் தொடர்கிறான்.]

மது. இதற்காகத் தான் தகப்பனார் சொல்லுகிறார் விவாகத்தைப் பற்றி, ஒரு சந்தர்ப்பத்திலே "கடி யென்றார் கற்றறிந்தார்" என்று. விவாகத்தைக் கடியென்றார்.

சுந். விவாகத்தைக் கடிக்கிறதாவது ? கபிகளுக்கு நாயினுடைய குணமும் உண்டோ ?

மது. ஆஹா ! பார்த்தீர்களா ! என் தகப்பனாருடைய புத்தகத்தை அங்கே வைத்துவிட்டு வந்தாற்போ லிருக்கிறதே. எங்கே ஐயா அது ?

சுந். அங்கே இருக்கிறதையா.

மது. எங்கே ?

சுந். அதுதான் எனக்கும் ஞாபகமில்லை.

மது. விளையாடாதீர் ! எங்கே அது ? அது போனால் என்னுயிர் போனது போலத்தான்.

சுந். ஆனால் அது காணமற் போகக் கடவது !

மது. எங்கே சொல்லுமையா ?

சுந். பாபம்! அந்த ஓலைக்கட்டின் பக்கத்தில் வைத்திருக்கிறேனையா.

மது. எந்த ஓலைக்கட்டு?

சுந். புஸ்தகத்தின் பக்கத்திலிருக்கிற ஓலைக்கட்டு.

மது. எந்தப் புத்தகம்?

சுந். உங்களுடைய புஸ்தகம்.

மது. அதைத் தான் எங்கே வைத்தீர்?

சுந். ஓலைக்கட்டின் பக்கத்திலே.

மது. எந்த ஓலைக்கட்டு?

சுந். உங்கள் புஸ்தகத்தின் பக்கத்திலிருக்கிற ஓலைக்கட்டு.

மது. என்னையா விளையாடுகிறீர்!

சுந். புஸ்தகத்தின் பக்கத்தில் ஓலைக்கட்டு—ஓலைக்கட்டின் பக்கத்தில் புஸ்தகம்—புஸ்தகம் உங்களுடையது—உங்களுடைய சிநேகிதன் நான்—நான் புஸ்தகத்தைத் தாரைவார்த்து விட்டேன். ஆகையினால், என்னால் உங்களுடைய புஸ்தகம் தாரை வார்க்கப்பட்டது, தீர்மானம், முடிவு, முற்றிற்று, திருச்சிற்றம்பலம், கடவுள் துணை!

மது. உமக்கெல்லாம் வேடிக்கைதான்! நானாவது போய்த் தேடிப் பார்க்கிறேன். [போகிறான்.]

மத. [வெளிவந்து] தீர்ந்ததா வேலை? இப்படிவாரும் சற்று.

சுந். மதனிகா, நீ என்ன சொன்னாலும் சொல். என்மீது குற்றமேயில்லை. உங்கள் பாட்டன் ஆணை!

மத. நான் சுமந்திரரை இங்கு வராவண்ணம் பார்த்துக்கொள்ளும்படி கேட்டதற்கு ஆகட்டுமென்று கூறிவிட்டுத் தாமே அழைத்துவந்தீரே—அதென்ன?

சுந். ஐயோ! நானா அழைத்துவந்தேன்? நான் எவ்வளோ யுக்தியாகத் தடுத்தும் அவர் ஒரே பிடிவாதமாய் வந்தார். போதாக்குறைக்கு ரத்னாங்கிதேவியும் வந்தார்கள். நான் என்ன செய்வது? எப்படியாவது என்னை மன்னித்து—உம்—என்ன சொல்கிறாய்?—

மத. ஆம், முதலில் சொன்ன வேலையைச் செய்துவிட்டீரே. போம் என்முன் நில்லாதீர்!

சுந். பின்பாக நிற்கட்டுமா ?

மத. உம்மால் ஒரு காரியமாக வேண்டிருக்கிறது, இதையாவது ஜாக்கிரதையாகச் செய்யும்.

சுந். உத்தரவுபடி. நீ கையால் இட்டவேலையைக் காலால்செய்ப—ஆஆ!—காலால் இட்டவேலையைத் தலையால் செய்யக் காத்துக்கொண்டிருக்கிறேன்.

மத. வாரும் சொல்லுகிறேன். [இருவரும் போகிறார்கள்.]

# இரண்டாம் அங்கம்

## முதற் காட்சி.

இடம்—அரண்மனையிலொரு முற்றம். காலம்—சாயங்காலம்.

சாரங்கதரனும், சுமந்திரனும் வருகிறார்கள்.

சும. அரசே, மஹாராஜா இப்பொழுது தம்மீது கோபம் கொண்டிருந்தபோதிலும் சீக்கிரத்தில் அக்கோபம் மாறி உமது வேண்டுகோளுக்கிசைவார் என்பதற்குத் தடையில்லை. இதைப்பற்றித் தாம் வருத்தப்படவேண்டியதில்லை.

சா. ஆயினும் அதற்காக வருத்தப்படவில்லை. மஹாராஜாவினுடைய குணமே இப்பொழுது ஏதோ மாறியிருக்கிறது. நான் வந்ததுமுதல் என்னுடன் ஒருவாறாகவே பேசுகிறார். முன்பு இப்படி எப்பொழுதும் இருந்ததில்லையே! நான் என்ன குற்றம் செய்தேன் ? இதுவே எனக்குச் சஞ்சலத்தை விளைக்கிறது.

சும. அப்படி ஒன்றுமில்லை. இதையெல்லாம் நாம் ஒரு பொருட்டாகப் பாவிக்கலாகாது.

சா. ஆயினும் இது என் மனத்தை விட்டகலேன் என்கிறது! சுமந்திரா, நாம் ஏதாவது வேடிக்கையாய்ப் பொழுது போக்குவோம் வா.

சும. அப்படியே செய்வோம். நந்தவனத்திற்குச் சென்று வேடிக்கையாய்க் காலம் கழிப்போமா ?

சா. சீ! அது பெண்கள் செய்யும் தொழில், வேண்டாம்; இதோ சுந்தரகன் வருகிறான், அவனைக் கேட்போம்.

சுந்தரகன் மதுரகவி வருகிறார்கள்.

சுந்தரகா, பொழுதுபோக்க ஏதாவது ஒரு நல்ல மார்க்கம் சொல்.

சுந். அப்படியா? அதற்கென்ன? பொழுதுபோக்க நல்ல மார்க்கங்கள் இரண்டு இருக்கின்றன. ஒன்று மடைப்பள்ளி மார்க்கம், மற்றொன்று பள்ளியறை மார்க்கம்; இந்த இரண்டு மார்க்கங்களிலும் எதில் போனபோதிலும் நன்றாய்ப் பொழுது போக்கலாம்.

சா. சீ! விளையாடாதே!—

சுந். உம், இது வேண்டாவிட்டால் இன்னொரு மார்க்கம் இருக்கிறது. நம்முடைய கபி ஒரு பிரபந்தம் எழுதியிருக்கிறதாகச் சொல்லுகிறார். அவர் முகத்தைப் பார்த்தாலே தெரியவில்லையா? அதைக் கேட்க ஆரம்பித்தால் சிரித்தே பொழுது போக்கலாம்.

சும. ஏனையா, என்ன பிரபந்தம்?

மது. அதைப்பற்றி தகப்பனார் சொல்லுகிறார்—

சா. போதும், நிறுத்தும். உம்முடைய தகப்பனாரை விடமாட்டீர் போலும்!

சுந். அரசே, இதில் எனக்கொரு சந்தோஷம். அவருடைய தகப்பனாருடன் நம்மை விட்டுவிடுகிறாரே. பாட்டனாரையும் அழைத்துக்கொண்டு வாராமல்!

சா. மற்று என்ன செய்யலாம்? சொல்லுங்கள், சுமந்திரா, சுந்தரகா.

சும. நமது தர்மசாலைக்குச்சென்று தர்மங்களெல்லாம் சரியாக நடந்தேறி வருகிறனவா எனப்பார்த்து வருவோம்.

சுந். நல்ல விளையாட்டு! நீங்கள் அந்த விளையாட்டு விளையாடுங்கள், நான் சென்று மடைப்பள்ளியிலிருக்கும்படியான கட்டைகளையெல்லாம் இத்தனை யென்று தூக்கி எண்ணிப் பார்த்து, அந்த விளையாட்டு விளையாடி வருகிறேன்.

சா. சுமந்திரா, அவன் கூறுவதுண்மை தானே! நான் ஏதாவது

பொழுதுபோக்க விளையாட்டைச் சொல்லென்றால், இதை யார் கூறும்படி கேட்டது ?

சுந். அரசே, நான் சொல்வதைக் கேளும். நாம் சொக்கட்டானாடுவோம். சித்திராங்கி தேவிக்கு நன்றாக விளையாடத் தெரியுமாம், நான் கற்றுக்கொண்டு வந்திருக்கிறேன் அவர்களிடம்.

சா. ஆம். நல்ல யோசனை, சொக்கட்டான் ஆடுவோம்.

சும. அரசே, அதில் எனக்குக் கொஞ்சமேனும் இஷ்டமில்லை. இதைக் குறித்து நான் முன்பே பலமுறை கூறியிருக்கிறேன். இனி தாம் கவறாடலை விட்டுவிடுவதே நலம். அது தம்முடைய ராஜரீகத்திற்குத் தக்கதன்று.

சுந். அதேனையா அப்படி ? கிணறு வெட்டப் பூதம்புறப்பட்டதே!

மது. எங்கே பூதம் ? எங்கே பூதம் ?—

சுந். ஸ்!—பூதமுமில்லை, ஒன்றுமில்லை ஐயா ! பேசாமலிரும் சற்று —ஏனையா சொக்கட்டானாடலாகாது ?

சும. அரசே, பெரியோர்களெல்லாம் இச்சூதாகிய விளையாட்டைக் கடிந்திருக்கின்றனர்.

சுந். அவர்களுக்கு ஆடத்தெரியாது. ஆடத்தெரிந்த எந்தப் பெரியவன் கூடாதென்றான் சொல்லும்.

சும. இவ்வொரு குற்றமானது மற்றெல்லாக் குற்றங்களுக்கும் ஆதி காரணமா யிருக்கிறது. மூர்க்கம் கோபம் முதலிய துர்க்குணங்களையெல்லாம் இல்லாவிடத்தும் உண்டு பண்ணுகிறது. அரசர்களை தமது அரசையிழக்கச் செய்யவும், நண்பர்களை நட்பினின்றும் பிரிக்கவும், குபேரனையொத்த சம்பத்துடைய குடை நிழலிலிருந்து குஞ்சரமூர்ந்த கனவான்களையும் [illegible]மெலிந்தோருநர் நண்ணும்படிச்செய்யவும், கொழுநரினின்றும் பதிவிரதைகளைப் பிரிக்கவும் வல்லது, இச்சூதே. [illegible] இதன் தீமைகளையெல்லாம் எடுத்துரைக்க ஆயிரம் நாவைப்படைத்த ஆதிசேஷனாலு மாகாதென நம்பும்

சுந். முடிந்ததா ? அரசே, நான் சொல்வதைச் சற்றே கேளும். இதைப்போன்ற நன்மையைத் தரத்தக்கது இப்பூலோகத்தில் ஒன்றுமில்லை. இது சகல நன்மைக்கும் ஆதிகாரணமாயிருக்

கிறது. புத்திகூர்மை யுக்தி முதலிய நற்குணங்களை யெல்லாம் இல்லாவிடத்தும் உண்டு பண்ணுகிறது. அரசர்களுக்கு நாடுகள் மேன்மேல் அதிகரிக்கச்செய்வதும் [illegible]கம் உண்டாக்குவிப்பதும், அறத்திற் [illegible] அரசோடிருந்தரசாளும்படிச் செய்வதும் [illegible] விவாகம் செய்துவைப்பதும், இவைற்று[illegible] அதிகாரணமாயிருப்பது, இந்த சொக்கட்டான [illegible]டங்களே! இன்னும் இதன் நன்மைகளையெல்லாம் எடுத்துரைக்க, இவர் கூறிய ஆயிரம் நாவைப்படைத்த ஆதிசேஷனுடைய பாட்டனுக்கு முப்பாட்டனாலு முடியாது!—தீர்ந்ததா? ஏனையா சுமந்திரரே, நீர் கூறியதிற்கெல்லாம் பதில்கூறி விட்டேனா அல்லது இன்னும் ஏதாவது மிகுதி யிருக்கிறதா?

சும. அரசே, விதூஷகன் வேடிக்கைக்காக கூறுவதைத் தாம் உண்மையென்று கவனிக்கலாகாது.

சுந். ஏன், நான் சொன்னதெல்லாம் நியாயமல்லவோ?

சும. அதற்கென்ன? காக்கைவெளிதென்பாருமுளர், தாய்க் கொலைசால்புடைத் தென்பாருமிருக்கிறார்கள். ஆதலால் அரசே, நான் கூறிய நியாயங்களையெல்லாம் தாம் நன்றாய் ஆராய்ந் தறியவேண்டும்.

சுந். அரசே, இவர் கூறும்படியான நியாயங்களுக்கெல்லாம் பதில் கூறாவிட்டால் என்பெயர் சுந்தரக னன்று, கேளும்.

சும. அரசே, இன்னும் கேளும்; இச்சூதினால் வரும் தீமைகளை நள மஹாராஜனுக்கு ஆன்றோர் எடுத்துரைத்த வண்ணம், தமக்குக் கூறுகிறேன். சற்றே செவிகொடுத்துக் கேட்க வேண்டும்.

> அறத்தைவேர் கல்லு மருநாகிற் சேர்க்குந்
> திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும்—மறத்தையே
> பூண்டுவிரோ தஞ்செய் பொய்ச்சூதை மிக்கோர்கள்
> தீண்டுவரோ வென்றார் தெரிந்து.

நண்பனே, இந்நியாயங்களெல்லாம் நன்றாய்க் கருதத் தக்கனவாம்.

சுந். சரி, புத்திசாலி, நல்ல யுக்தி செய்தார். என்னவென்றாலும்

முன்பிருந்த முதன்மந்திரி சுசீலருடைய குமாரரல்லவா? அரசே, என்றால் அவர் பாடியவண்ணம் பாடமுடியாது. ஒப்புக்கொண்டேன். அதற்கு வேண்டுமென்றால் எங்கள் கவிராயரைத்தான் கேட்கவேண்டும். ஐயா, உங்கள் தகப்பனார் சூது நல்லது என்று ஏதாவது பாடியிருக்கிறாரோ பாருமையா.

மது. அப்பனே, அப்படியே பாடியிருக்கிறார்.

சுங். என்ன வென்று?

மது. கேளும்—“சூதினும் சூதானது யாதெனின் சூதினும் சூதே சூதானது” என்றும் இன்னும்—

சுங். “மட்டியினும் மட்டியானது யாதெனின் மட்டியினும் மட்டியே மட்டியானது” போதும்! புத்திசாலி, நிறுத்தும். நல்லது என்று சொல்லுங்களேயா வென்றால், இதைக் கூறினீரே!—போதும்.

சா. சுமந்திரா, நீ கூறியதெல்லாம் நியாயந்தான். ஆயினும் நாம் வேடிக்கையாய் ஆடினால் என்ன தவறு?

சும. முதலில் வேடிக்கையாகத்தானிருக்கும், பிறகு வினையாய் முடியும் என்பதற்குச் சந்தேகமில்லை. நிடதநாட்டு நிருபன் நள மஹாராஜன், முதலில் வேடிக்கையாகத்தான் ஆட ஆரம்பித்தார். பிறகு அதனால், அவர் தன் நாடு நகரமெல்லாம் இழந்து, தன் பதம் பணியும் அரசர் பதம் தான் பணிய, கானகஞ்சென்று, அல்லலுழந்து, மனைவி மக்களைப் பிரிந்து வாருகனாய் மடைத்தொழில் செய்யும்படி நேர்ந்துவிட்டதல்லவா! இவ்வளவிற்கும் காரணம் அச்சூதாட்டமன்றோ?

சுங். கொஞ்சம் நிறுத்துங்கள், அதற்கு நியாயம் கூறுகிறேன். நளன் நாட்டையிழந்தார் என்று கூறினீரே, புஷ்கரன் நாடு நகரமுதலியவற்றையெல்லாம் ஜெயித்து, தான் பணிந்த அரசன் தன்னைப் பணிய நிடதநாட்டைக் கைக்கொண்டான் அன்றோ? இவ்வளவிற்கும் காரணம் அச்சூதன்றோ? இரண்டு பட்சமும் எடுத்துக் கூறுமையா!

சும. புஷ்கரன் முதலில் ஜெயித்தபோதிலும் மறுபடியும் தோற்றானல்லவா?

சுந். மறுபடியும் நளன் ஜெயித்தானல்லவா? எதனால்? சூதாட்டத்தினால்! நியாயமாய்ப் பேசுமையா!

சும. அன்றியும் பாண்டவர்கள் தங்கள் ராஜரீகத்தை யெல்லாம் இழந்ததும், துரியோதனாதியர்க்கு முதலில் அடிமைப்பட்டதும், சூதினாலன்றோ? அவைகளையாவது யோசித்துப்பாரும்.

சுந். இதையும் யோசித்துப் பாரும். பாண்டவர்கள் தோற்றால் துரியோதனாதியர்கள் ஜெயிக்கவில்லையா? அல்லாமலும் பாண்டவர்கள் தங்களடிமைத்தனத்தை சூதினாலன்றோ மீட்டுக் கொண்டார்கள்? இதற்கு நியாயம் சொல்லுமையா. ஒருவர் தோற்றால் இன்னொருவர் ஜெயிக்கிறாரே, அதை யோசிக்க வேண்டாமா?

சா. ஆம், அதற்கென்ன நியாயங் கூறுகிறாய் சுமந்திரா?

சும. ஐயனே! அது ஜெயிப்பதன்று. முதலில் நலத்தைப்போற் காட்டினும் முடிவில் அதுவே துன்பத்திற் கேதுவாம். திருவள்ளுவர் கூறியிருக்கிறதை மறக்கலாகாது, "வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉந் தூண்டிற் பொன்மீன் விழுங்கி யற்று."

சா. ஆம் சுமந்திரா, நீ கூறுவதெல்லாம் உண்மையே. நாம் நமது எதிரிகளுடன் சூதாடலாகாது, வாஸ்தவமே. ஆயினும் உன்னையொத்த நண்பர்களுடன் சூதாடுவதில் என்ன தவறிருக்கிறது? நீ ஜெயித்தாலும் நான் ஜெயித்தாலும் ஒன்றுதானே. நீ என்னை வஞ்சிக்கப்போகிறதில்லை, நானும் உன்னை வஞ்சிக்கப் போகிறதில்லை.

சுந். ஆம், அப்படிக் கேளுங்கள்.

சும. அதுவும் தவறுதான் ஐயனே.

"பாரதத் துள்ளும் பழிப்புறு சூதாடி
யீரைம் பதின்மரோ டைவரும்—போரெதிர்ந்
தேதில ராகி யிடைவிண்டா ராதலாற்
காதலரோ டாடார் கவறு."

என்று பெரியோர் கூறியிருக்கிறார்.

சா. சரிதான், சுமந்திரா. நாம் காலம்போக்க வேறு ஏதாவது வழி சொல்.

சுந். சரி! சதுரங்கம், சொக்கட்டான் ஆடலாகாது; தீர்ந்தது! பிறகு என்ன செய்வது? ஐயா, சுமந்திரரே, கோலி, பம்பரம், முந்திரிக்கொட்டை, இறக்கி, சிதம்பரம் ஆடலாமா? அதாவது சொல்லுங்கள்.

சும. அவைகளிலும் பந்தயம் வைத்திடலாகாது.

சுந். ஒழிந்தது, ஆனல் அரசே, சும்மா! சும்மா! ஆடலாம், வாருங்கள், சும்மா!

மது. எங்கள் தகப்பனர் "சும்மா வருமோ சுகம்" என்றெழுதியிருக்கிறர்.

சா. தோழனே, எதுவு மாகாதென்கிறய், ஏதாவது சொல் சீக்கிரம். என்மனம் ஒருவாறு யிருக்கிறது. குதிரையேறிச் சவாரி செய்வோமா? யானையின்மீது பவனி வருவோமா? புறு விடுவோமா?

சும. அரசே, புறு விடுவோம் வேடிக்கையாக.

சுந். சும்மா! சும்மா! விடுவோம்.

மது. "சும்மா வருமோ சுகம்"—

சா. ஆம், அது தான் நல்ல வேலே. சுந்தரகா, என்னுடைய தாராவைக் கொண்டுவா ஜாக்கிரதையாக

சும. என்னுடைய கெய்ராவைக் கொண்டுவா.

சுந். அப்படியே என் துணியாவையுங்கொண்டு வருகிறேன்.
[போகிறன்]

மது. ஐயா, சுமந்திரரே, புறு என்பது என்ன?

சும. புறு என்பது தெரியாதா? ஒரு பட்சி.

மது. பட்சி! எதைப் பட்சிக்கும்?

சா. எதையா பட்சிக்கும்! [நகைக்கிறன்.]

மது. இல்லே, மனிதரைப் பட்சிக்குமா என்று சந்தேகம்.

சா. ஆமாமையா, நீர் போம், இங்கிராதீர்!

மது. உத்தரவுப்படி. சந்தோஷம்! [விரைந்து போகிறன்.]

சுந்தரகன் புறுக்களைக் கொண்டுவருகிறன்.

இருவரும். கொடு இப்படி! கொடு இப்படி!

சா. சுமந்திரா, சித்தமாயிருக்கிறபா? விடுவோமா?

சும. வேடிக்கையாக விடுவோம். யாருடைய புறு அதிக உயரமாய்ப் பறக்கிறதோ பார்ப்போம். பந்தயம் வேண்டாம்.

சா. சரி, அப்படியே ஆகட்டும்.

இருவரும். சித்தம்!—விட்டேன் இதோ! [புறுக்களை விடுகின்றனர்.]

சுந். நானும் விட்டேனிதோ!

[துணியினாற்செய்த ஒரு புறுவை மேலே எறிய, அது கீழே விழுந்ததும் மெதுவாக எடுத்து மறைத்து வைத்துக்கொள்கிறான்.]

சா. ஆஹா! சுமந்திரா, என்ன வேகமாய்ப் போகிறது பார்த்தாயா என் தாரா!

சும. ஆஹா! அரசே, என் கெய்ரா எவ்வளவு வேகமாய்ப் பறக்கிறது அதைப் பார்த்தீரா!

சுந். ஆஹா இரண்டு பேருமே! எங்கே பறக்கிறது பார்த்தீர்களா என் துணியா!

சா. சும. என்னுடையதே முந்திச் செல்கிறது!

சா. சுமந்திரா, என் புறுத்தான் ஜெயித்தது!

சும. இல்லை அரசே, என் புறுத்தான். அதோ பாரும்.

சா. நீ தான் பார். என் தாராவே முந்திச் செல்கிறது.

சும. நன்றாய்ப் பாருமிப்பொழுது, என்கெய்ரா முந்திச்செல்கிறது.

சா. சீ! என் புறுத்தான்!

சும. இல்லை, என் புறுத்தான்!

சா. சுந்தரகனைக் கேட்டுப் பார்ப்போம். சுந்தரகா, யார் புறு முந்திச் செல்கிறது?

சும. யார் புறு முந்திச் செல்கிறது?

சுந். உங்கள் புறு எங்கே யிருக்கிறது, சொல்லுங்கள்,

சா. அதோ பார்.

சுந். உங்கள் புறு?

சும. அதோ!

சுந். சரி! தெரிந்தது.

இருவரும். யார் புறு ஜெயித்தது?

சுந். கேட்பானேன்? என் புறு! என் புறு!

சா. உன் புறுவா? நீ எங்கே புறு விட்டாய்? எங்கே உன் புறு?

சுந். அதுதான் உங்களைக் கேட்கிறேன் நான். எங்கே யென்புறா?

சா. ஆகாயத்தில் காணேமே!

சுந். சரி, அதுதான்ஜெயித்து, கண்ணுக்கெட்டாத தூரத்திற்குப் போய்விட்டது!

சும. அரசே, அவன் விளையாடுகிறான். புறாவும் விடவில்லை, ஒன்று மில்லை.

சா. சுந்தரகா, விளையாடாதே. யார் புறா ஜெயித்தது சொல்.

சுந். அரசே, இப்படி நிமிர்ந்து பார்ப்பதென்றால் கழுத்துநோயெடுக்கிறது. மல்லாந்து படுத்துப் பார்க்கிறேன்.

[படுத்துக் கொள்கிறான்.]

சா. சுமந்திரா, தூரத்திற் செல்லும்படியான என் புறா ஒரு கறுப்புப் புள்ளியைப் போலன்றோ தோற்றுகிறது?

சும. ஆம், என் புறாவும் அப்படித்தான் தோற்றுகிறது.—சுந்தரகா, யார் புறா உயரச் சென்றது பார்த்தாயா?

சா. சீக்கிரம் சொல்.—என்ன பேசாமலிருக்கிறாய்?

சும். சுந்தரகா!—என்ன உறங்கிவிட்டானா என்ன? சுந்தரகா! எழுந்திரு. [தட்டி எழுப்புகிறான்.]

சுந். ஆ!—என்ன சமாசாரம்?

சா. யார் புறா?

சுந். என்ன புறா?

சா. யார் புறா ஜெயித்தது?

சுந். புறா ஜெயிப்பதாவது? என்ன புறா? எங்கே? என்ன சமாசாரம்? தூக்கத்தில் ஒன்றும் தெரியவில்லை.

சும. சீ! விளையாடாதே. உண்மையைக்கூறு.

சா. விளையாடினால் எனக்குக் கோபம் வரும்.

சுந். பார்த்தீர்களா? சுமந்திரர் முன்பு சொன்னது வாஸ்தவம் தான். இதற்குள்ளாக கோபம் வந்துவிட்டதே.

சா. இல்லை, சொல். யார் புறா அதிக உயரம் பறக்கிறது?

சுந். சொல்லட்டுமா! இந்தக் கண்ணை மூடிக்கொண்டு பார்த்தால் உமது புறா ஜெயித்தாற்போலத் தோற்றுகிறது. இந்தக் கண்ணை மூடிப் பார்த்தால் சுமந்திரர் புறா ஜெயித்தாற் போலத் தோற்றுகிறது. இரண்டு கண்களையும் மூடிப் பார்த்தாலோ என் புறாத்தான் ஜெயிக்கிறது!

சா. போதும் விளையாட்டு, நிஜத்தைச் சொல்.

சுந். [அவனிடம்] உம்முடைய புருத்தான் ஜெயித்தது.

சா. ஆ! சுமந்திரா, பார்த்தாயா?

சும. என்ன பார்ப்பது? சுந்தரகா, யார் புரு ஜெயித்தது?

சுந். [அவனிடம்] கேட்பானேன்? உம்முடைய புருத்தான்.

சும. கேட்டீரோ அரசே? அப்படி!

சா. எப்படி, விதூஷகா, என் புருத்தானே?

சுந். [அவனுக்கு] சந்தேகமென்ன?

சா. இப்பொழுதென்ன சொல்லுகிறாய்?

சும. என்ன சொல்வது? விதூஷகா, என் புருத்தானே?

சுந். [அவனுக்கு] சந்தேகமில்லை.

சும. பார்த்தீரா? நான் தான் ஜெயித்தேன்.

சா. நான்தான் ஜெயித்தேன்.

சும. கேளும் சுந்தரகனை.

சா. நீதான் கேள்.

சும. யார் புரு? [சுந்தரகனுடைய வலது கரத்தைப்பற்றி]

சுந். உம்முடையது.

சா. யார் புரு? [சுந்தரகனுடைய இடது கரத்தைப்பற்றி]

சுந். உம்முடையது.

சும. யாருடையது?

சுந். உம்முடையது.

சா. ஆ! யாருடையது?

சுந். உம்முடையது. [இவ்வாறு இருபுறமும் வலிக்க] ஐ ஐயோ என்னை விட்டு விடுங்கள், விட்டு விடுங்கள். இரண்டு பெயருடைய புருக்களும் ஜெயித்தன.—அப்பா! அப்பா! இரண்டு பெயருடையதும் ஜெயிக்கவில்லை. நான் தான் ஜெயித்தேன், போதும்!

சா. சுந்தரகா, உன்னைக் கடைசி முறை கேட்கிறேன். நன்றாய்ப் பார்த்துச் சொல். யார் புரு ஜெயித்தது?

சும. ஆம், கடைசி முறை சொல்.

சுந். அரசே, முன்பு பார்த்தால் உங்கள் புரு ஜெயிக்கிறது, பிறகு பார்த்தால் சுமந்திரருடைய புரு ஜெயிக்கிறது.

சும. அரசே நீர் தான் ஜெயித்தீர், உண்மைதான். இதோ பாரும். என் புரு திரும்பிவிட்டது.

சுந். அதைத்தான் நானும் சொன்னேன். முன்பு அவர் புரு, பிறகு உமது புருவென்று.

சா. சுமந்திரா, பார் என் புரு திரும்பி வருகிறது—அடடா! திரும்பி வருவது இங்கு வராமல் எங்கேயோ போகிறதே!

சுந். ஆம், ஆம். கிழக்காகச் செல்கிறதே!

சா. ஐயோ! அந்தப் பக்கமாக மறைந்து விட்டதே! சுந்தரகா, நீ அங்கு சென்று அது எங்கு இறங்குகிறதெனக் கண்டறிந்து, ஜாக்கிரதையாக, அதற்கு ஒரு தீங்கும் நேரிடாமல் பிடித்துவா. அது என் கண்ணின் கருமணிபோல் நான் வளர்த்துவரும் தாரா!

சுந். அப்படியே, ஐயனே. (போகிறான்)

சா. எங்கே போயிருக்கும்?

சும. எங்கும் போயிருக்காது, அடுத்த மாளிகையில் அந்தப் பக்கமாக இறங்கினாற் போல் காண்கிறது. எப்படியும் அதைப் பெறுவீர், வருந்தவேண்டாம். அது உம்முடைய புரு என்று எல்லோர்க்கும் தெரியும். அதற்கு ஒருவரும் தீங்கிழையார்கள்.—இதோ சுந்தரகன் ஓடி வருகிறான் கேட்டறிவோம்.

சுந்தரகன் ஓடி வருகிறான்.

சா. எங்கே என் புரு சுந்தரகா?

சுந். சற்று—நிதானியுங்கள்—சொல்லுகிறேன்—

சா. சீக்கிரம் சொல்.

சுந். அப்படியே—கிழக்காகப் போயிற்று?

சா. உம்—

சுந். அப்படியே மேற்கிலிருந்து வடக்கே வந்து, தெற்கேபாய்ந்து, தென் கிழக்காகப் போய், வடமேற்காய்த் திரும்பி, தென் மேற்காய்ப் பறந்து, வடகிழக்கிலே ஓடி, தென்கீழ், வடகீழ், மேல்கீழ், தலைகீழாக விழுந்தது!

சா. விளையாடுகிறாயா என்ன ! உண்மையைக் கூறமாட்டாய் நீ ?
[உடைவாளை உருவுகிறான்.]

சுங். இல்லை, இல்லை. அந்தக் கத்தியை உறையில் போடுங்கள் தயவு செய்து.

சா. இல்லை, சொல்.

சுங். இங்கிருந்துபோய் சித்ராங்கியம்மாள் மாளிகையில் இறங்கிற்று ; மாளிகையின்மேல் உப்பரிகை, உப்பரிகையின்மேல் சிகரம், சிகரத்தின்மேல் புறு!—

சும. அப்படியா ?—பிறகு—

சுங். பிறகு சித்ராங்கிதேவி பிடித்து வைத்துக் கொண்டார்கள். அவ்வளவுதான்.

சும. சீ !

சா. நீ போய்க் கேட்டு வாங்கிக்கொண்டு வருகிறதுதானே ?

சுங். போய்க் கேட்டேன். அரசே, நான் பட்டபாடு சுவாமிக்குத்தான் தெரியும். சாரங்கதர ராஜனன்றி வேறு யார் வந்து கேட்டபோதிலும் கொடுப்பதில்லை என்று சொல்லி என்னைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளினார்கள் அரசே !

சா. யார் சொன்னது அப்படி ?

சுங். சித்ராங்கிதேவி அவ்வாறு கட்டளை யிட்டதாக மதனிகை கூறி என்னை வெளியே தள்ளினாள். அதற்காக வருத்தப்படவில்லை ; அரசே, அங்கிருந்த இன்னொருத்தி, பாங்கி, 'நீ போ' என்று ஒருமையாகப் பேசினாள். அதை நினைத்தாலே எனக்குத் துக்கம் மேன்மேலும் அடக்கக்கூடாமல் வருகிறது. மதனிகை அடித்தாள், நான் பெற்றுக்கொண்டேன் ; அது எனக்கிஷ்டம்.—இன்னொருத்தி என்னை 'நீ போ' என்று எப்படிச் சொல்வாள் ? அரசே, எப்படியாவது அந்தப் பாங்கியை அரண்மனையினின்றும் நீக்கிவிட்டு, மதனிகையை எனக்கு விவாகஞ் செய்து கொடுக்கவேண்டும். அரசே, அப்பொழுதுதான் என் ஆத்திரம் அடங்கும்.

சா. அதிருக்கட்டும், விளையாடாதே!—சுமந்திரா, எப்படியாவது என் தாராவை நான் சீக்கிரம் பெறவேண்டும். நீ இங்குதானே சற்றிரு. நான் போய்க்கேட்டு வாங்கிக்கொண்டு வருகிறேன்.

சும. [தடுத்து] அரசே, சற்றுப்பொறும்—சுந்தரகா, சற்று நீ அப்புறம் போ. [சுந்தரகன் போகிறான்.] ஐயனே, தாம் சற்றுப் பொறுத்துச் செல்லலாகாதோ? மிகவும் களைத்திருக்கிறீர். அரண்மனைக்குச் சென்று போஜனம் கொண்டு பிறகு சென்று புறாவைப் பெற்று வரலாகாதோ?

சா. இல்லை, இல்லை. இப்பொழுதே என் கண்மணி தாராவைப் பார்க்கவேண்டும். நாமே களைத்திருந்தால் அவ்வளவு தூரம் பறந்து ஜெயித்த என் தாரா எவ்வளவு களைத்திருக்க வேண்டும்? அதற்குணவிட மற்றவர்களுக்குத் தெரியாது, நானே உணவிடவேண்டும். நான் போகிறேன்.

சும. நான் போய்க் கேட்டு வாங்கி வருகிறேன். உமக்கேன் அவ்வளவு கஷ்டம்?

சா. நான் வந்தாலன்றிச் சித்திராங்கிதேவி கொடுக்கமாட்டேனென்று கூறினார்களாமே, மறந்தாயோ?

சும. நான்போய் எப்படியாவது கேட்டு வாங்கி வருகிறேன்.

சா. என் காலத்தைப் போக்காதே. நான் போவதை ஏன் தடுக்கிறாய்?

சும. நீர் போவது எனக்கிஷ்டமில்லை—

சா. இஷ்டமில்லையா! ஏன்?

சும. சற்று நிதானிக்கவேண்டும்—என்ன காரணம் பற்றிச் சித்ராங்கியம்மாள் நீர் வந்தாலொழியப் புறாவைக் கொடுப்பதில்லையென்று கூறியிருக்கிறார்களென நினைக்கிறீர்?

சா. என்ன காரணம்பற்றி யிருக்கப்போகிறது? நான் நேரில் வந்து பெற்றுக்கொள்ளட்டுமென்று கூறினார்கள் போலும். நான் ஏன் போகலாகாது?

சும. நீர் நேரில் சித்ராங்கிதேவியைப் பார்ப்பது எனக்கிஷ்டமில்லை.

சா. சுமந்திரா, என்ன பேசுகிறாய்? நான் எனது சிற்றன்னையை நேரிற்கண்டால் என்ன தவறு?

சும. ஐயனே, உமக்கு இன்னும் விளங்காமலிருக்கிறதே! என் செய்வேன்? தெய்வமேகதி!—அரசே, சித்திராங்கிதேவியை உமது சிற்றன்னையெனக் கருதாதீர்.

சா. ஏன் கருதலாகாது?

சும. அவர்கள் உம்முடைய பிதாவை விவாகஞ் செய்துகொள்ள வில்லையே—இன்னும்.

சா. விவாகஞ்செய்து கொள்ளாவிட்டாலென்ன ? ஏதோ நோன்பு நோற்கிறார்களாம். அது முடிந்தவுடன் விவாகமாகிறது.

சும. அவ்வளவும் சூது— என்னை மன்னிக்கவேண்டும்.—

சா. சூதாவது சுமந்திரா ? எனக்கொன்றும் புலப்படவில்லை. விளங்கச்சொல்.

சும. ஈசன் அருளெல்லாம் !—அரசே, சித்திராங்கியை உமக்கு முதலில் விவாகஞ்செய்யத் தீர்மானித்து உம்முடைய படத்தை அவளது தகப்பனுக்கு அனுப்பியிருந்தது. அதைக் கண்டு அந்த அம்மாளும் அவளுடைய தகப்பனும் இசைந்து, சித்ராங்கியின் படத்தை யிங்கனுப்பினார்கள். அப்படத்தைக் கண்டு, நமது மஹாராஜா மோகித்துத் தாமே மணம்புரிய வெண்ணி, சித்ராங்கியம்மாளைச் சூதாக இங்கு வரவழைத்துக் கேட்க, அவர்கள் நடந்த வஞ்சனையை யறிந்து மஹாராஜா வுக்குப் போக்காக விரதம் பூண்டிருப்பதாகக் கூறி வருகி றார்கள்.

சா. இது உண்மையாயிருக்குமா ?

சும. இதில் அணுவளவும் பொய்யில்லை. உம்மீது ஆணை. சித்தி ராங்கிதேவி உம்மீது காதல்கொண்டு உம்மையன்றி வேறெந் தப் புருஷனையும் விவாகம் செய்துகொள்வதில்லையென்று சபதம் செய்திருக்கிறார்களாம் அரசே, இப்படி இருக்கும் சந்தர்ப்பத்தில், நீர் தனித்து அவர்கள் மனைக்கேகுவது நல்ல தோ என்று சற்று யோசித்துப் பாரும்.

சா. சுமந்திரா, நீ கூறுவதெல்லாம் எனக்குச் சரியாகத் தோன்ற வில்லை. என் பிதா அப்படி ஒருகாலும் சூது செய்யமாட்டார். அதுவுமன்றி ஹஸ்தினபுரத்து மன்னனாகிய என் பிதாவை விட்டு, சித்திராங்கிதேவி என்னை மணம்புரிய விரும்பமாட் டார்கள். அன்றியும் நான்தான் இப்பொழுது விவாகஞ் செய்துகொள்ளப்போகிறதில்லையே ! அதுவுமன்றி என்பிதா சித்திராங்கிதேவியை விவாகம்புரிய நினைத்திருக்கும்பொழுது நான் தவறான எண்ணம் ஏதாவது கொள்வேனோ ?

சும. நீர் தவருன எண்ணங்கொள்ளமாட்டீர் உண்மையே. ஆயினும் அந்த அம்மாள் ஏதாவது நினைத்தால் ?

சா. அப்படி ஒன்றும் நினைக்கமாட்டார்கள். வீண் பாபம்! வீணாக ஒரு ஸ்திரீயின்மீது அபவாதமுரைக்காதே! நான் போய் வருகிறேன்.

சும. ஐயனே ! எது எப்படியிருந்தபோதிலும் ஒரு மாது தனித்திருக்கும்படியான இடத்திற்குத் தாம் போவது நியாயமன்று. அன்றியும் சித்திராங்கிதேவியோ தம்மீது இச்சை கொண்டிருக்கிருர்கள்.

சா. என்னை விவாகஞ்செய்துகொள்ளும்படி கேட்டால், நான் மாட்டேன், என்று கூறி விடுகிறேன்.

சும. ஐயனே, உமக்கு உலகம் இப்படிப்பட்டதென்று இன்னும் தெரியாது—அவர்கள் பலாத்காரஞ் செய்வார்கள்—ஒரு பெண் பலாத்காரஞ் செய்தால் எப்படிப்பட்ட ஆடவன் மனமும் கலங்கிப் போம், பிறகு பெருந் தீமைக்கிடமாகும்—

சா. என்ன சொன்னுய் மதியீனு ? சித்ராங்கிதேவியைக் கேவலம் வேசியென எண்ணினுயோ ? அல்லது தாயைத் தீண்டும் பாதகனென என்னை நினைத்தாயோ ? அடே சுமந்திரா ! நீ இதை என்னிடம் கூறித் தப்பினுய் ! வேருருவன் கூறியினுயின் அவனது நாவை இந்த க்ஷணம் இரு துண்டாக்கியிருப்பேன். எனது சிற்றன்னையைத் தூஷித்த பாபி! நில்லாதே என் முன்னே ! நீ சொன்னதைப் பொய்யென்று உண்மைப்படுத்துவதற்காவது இப்பொழுது நான் செல்கிறேன்; தடுக்காதே என்னை !

சும. [அவன் கையைப்பிடித்து] ஐயனே ! இன்னும் சற்றுக் கேளும் நான் சொல்வதை !

சா. தீண்டாதே என்னை; பாதகா! அயல் மாதர்கள்மீது வீணைக் பழியைச் சுமத்தும் நீ, இன்னும் என்ன செய்யமாட்டாய் ! விடு என் கையை !

சும. [அவன் காலில் விழுந்து] அரசே ! அரசே ! என் மீது வீணில் கோபங்கொள்ளாதீர். நான் உமது நன்மைக்கே இவைகளையெல்லாம் கூறினேன் . கெடுமதி கண்ணுக்குத் தோன்ருது

என்பதுபோல, அந்த நியாயங்களெல்லாம் உமக்கு விளங்க வில்லை. ஐயனே, இப்பொழுதங்கு போவீராயின் எப்படியும் உம்மைப் பெரும்பழி சூழும். வேண்டாம், வேண்டாம்!—

சா. அடே! என் காலை விடுகிறாயா என்ன?

சும. நான்மாட்டேன்! என்னைக் கொன்றுவிட்டு அப்புறம் ஓரடி யேனும் எடுத்து வையும். உமக்குத் தீங்கு நேரிடாமுன்பு நான் இறந்தலே நலம். என்னுயிரைக்கொண்டு அப்புறம்போம். பிறகு நீர் அப்பாதகியால் தீங்கிலுழல நான் கண்டு சகியேன்.

சா. சீ! விடு என்னை! பாபி! [திமிறிக்கொண்டு போகிறான்.]

சும. ஆ! நண்பனே, இப்படியும் இருந்ததா உமது விதி! நீர் என்ன செய்வீர்? விதிபற்றி உந்தினால் உமது மதி என்ன செய்யும்? அதுவும் உலகில் தீமை என்பதையே அறியாதவர். எமன் கையிலகப்பட்ட உயிரைப்போல், நீர் மீள்வது அசாத்தியம். எப்படியும் அப்பாபி உம்மைப் பலாத்காரம் செய்யப்போகி றாள். நீர் உடன்பட்டாலும் கெடுதிதான், உடன்படாவிட் டாலும் தீமைதான். போதாக்குறைக்கு மதனிகையாகிய பாதகியி னுதவிபெற்றிருக்கிறாள். தீர்ந்தது இனி! நான் வருந்தியாவதென்ன?—எங்கே போகப்போகிறீர் மறுபடியும்? என்னிடந்தான் வரப்போகிறீர்; அப்பொழுது வருந்தியாவ தென்ன? ஈசனே! ஈசனே! [அழுதவண்ணம் போகிறான்.]

---

## இரண்டாங் காட்சி.

இடம்—சித்திராங்கியின் சயனக்கிருஹம். காலம்—அந்திப்பொழுது.

சித்திராங்கி சயனத்தின்மீது உட்கார்ந்திருக்கிறாள்.

மதனிகை ஒரு புறமாய் நிற்கிறாள்.

சி. மதனிகா, இந்நேரம் பார்த்தும் வரக்காணோமே என் பிராண நாதன்!—ஒருவேளை அப்படுபாவி சுமந்திரன் மொழியைக் கேட்டு இந்தப்புறம் போனாற்போகட்டு மென்றிருக்கிறாரோ என்னவோ, அப்படி யிருந்தால் என்னடி செய்வேன்?

மத. ஆம், என்ன செய்வது?

சி. மதனிகா! என்ன செய்வது சொல்லடி.

மத. வருந்தவேண்டாமம்மா, எப்படியும் சீக்கிரம் வருகிறார் பாரும், அந்தப்புறத்தைவிட்டுப் பிரிந்திரார். [வெளியே நோக்கி] அதோ வருகிறார் பாரும் விரைந்து.

சி. ஏதோ ?—ஆம் ஆம் !—மதனிகா ! மதனிகா ! நீ போ வெளி யே ! போ !

மத. ஏன், நானும் இங்கிருக்கிறேனே ?

சி. சீ ! போ ! விளையாடாதே. [மதனிகை போகிறாள்.]
[அருகிலிருக்கும் ஒரு கண்ணாடியில் தன்னுருவத்தைப் பார்த்து] நான் அழகாயிருக்கிறேனா ? அழகாயிருக்கிறேனா ?—

சாரங்கதரன் வருகிறான்.

வாரும் ராஜகுமாரா, வாரும் ஏது இவ்வளவு தூரம் வந்தது ? அடியாள்மீது இப்பொழுதுதான் தயை வந்தாற்போ லிருக்கிறது.

சா. அம்மணி, என்னுடைய தாரா இங்கு பறந்து வந்ததாகவும் அதைத் தாம் பிடித்து வைத்துக்கொண்டு நான் வந்தாலொழிய க் கொடுப்பதில்லையென்று கூறினதாகவும் சுந்தரகன் வந்து கூறினான். அப்புறாவைப் பெற்றுப் போகவந்தேன். எங்கே அந்தப் புறா ? தாரும்.

சி. அதற்கென்ன தருகிறேன். தாங்களேது பாதசாரியாய் வந் தாற்போலிருக்கிறதே? என்ன களைத்திருக்கிறீர் ! இதோ நான் சற்று விசிறுகிறேன், களை தீர ஏதாவது அருந்துகி றீரா ? என்ன வேண்டும் ? உட்காரும் சற்று. ஐயோ! என்ன வியர்க்கிறது உமது மதிவதனத்தில், இதோ துடைக்கி றேன். தாம் இவ்வளவுதூரம் வரவேண்டுமா, என்னை யழைத் திருந்தால் நான் வந்திருப்பேனே,

சா. அம்மணி, இவ் வுபசாரங்களெல்லாம் எனக்கு வேண்டாம். எனக்கு இளைப்பாக இல்லை இப்பொழுது. என் புறாவைக் கொடும், நான் சீக்கிரம் போகவேண்டும். எனக்காகச் சுமந் திரன் காத்துக்கொண்டிருக்கிறான். அவனிடம் விரைவில் வருவதாகக் கூறிவிட்டு வந்தேன்.

சி. அதற்கென்ன ? இதோ தருகிறேன், அந்த அற்பமான ஒரு புறா மட்டுமோ ? உமக்கென்று இத்தனை நாளாக நான் போஷித்து வளர்த்துவரும் அழகிய புறாக்களையும் தருகி றேன், பிடித்துப்போம்.

சா. எங்கே அம்மணி ? எங்கே அம்மணி அந்தப் புறாக்கள் ? என் தாராவைப் பார்க்கிலும் சிறந்தனவோ ? நான் பார்க்கவேண்

டும். என்மீது அவ்வளவு ஞாபகம் வைத்து எனக்காக அப்புருக்களை வளர்த்து வந்ததற்காக உமக்கு மிகவும் வந்தனம் செய்கிறேன். எதோ, அவைகளை நான் பார்க்க வேண்டும்.

சி. பொறும், காட்டுகிறேன். அவசரப்படலாமா? அவசரப் பட்டா லெக்காரியமும் ஆகாது.

சா. இல்லை, அம்மணி. நேரமாகிறது. இப்புருக்களை யெல்லாம் சீக்கிரம் தாரும், தாரும்.

சி. அவசரப்பட்டால் நான் கொடுக்கவேமாட்டேன். நான் சொல்லுகிறபடி நடந்தால் சீக்கிரம் கொடுப்பேன். என்ன சொல்லுகிறீர்?

சா. அப்படியே ஆகட்டும். சீக்கிரம் எப்படியாவது புருக்களைக் கொடுத்தால் போதும். நீர் வளர்த்துவரும் புருக்கள் என்ன ஜாதி—சீனியா?

சி. சீனிக்கற்கண்டைப் பார்க்கிலும் மதுரமானதே.—அதிருக் கட்டும். இப்பொழுது நான் சொன்னபடி கேட்கிறீரா?

சா. கேட்கிறேன்—புறு எங்கே அம்மணி?

சி. ஆனல் இப்படி வாரும்.

சா. வந்தேன்.

சி. இப்படி உட்காரும்.

சா. உட்கார்ந்தேன், புறு எங்கே?

சி. முதலில் முகத்தை யெல்லாம் துடைத்துக் கொண்டு புஷ்ப மணிந்து கந்தம் கஸ்தூரி முதலியவற்றைப் பூசிக்கொள்ளும், தாம்பூலமணியும், பிறகு சொல்கிறேன்.

சா. ஐ ஐயோ! இவைகளெல்லாம் வேண்டா மம்மணி எனக்கு. இவைகளெல்லாம் எதற்கு? என் புறுவைக்கொடும் போகிறேன். [எழுந்திருக்கிறன்.]

சி. என் சொற்படி கேளாவிட்டால் உமது புறுவைத் தரமாட்டேன், போம்.

சா. இதென்ன பெரிய சங்கடமா யிருக்கிறதே! அப்படியே ஆகட்டு மம்மணி. புறுவைத் தாரும்.

சி. ஆ, அதுதான் சரி! வாருமிப்படி, உட்காரும். [கந்தகளபம் பூசி புஷ்பமணிவித்து] இப்பொழுது நீர் என்ன அழகாயிருக்கிறீர்! பாரும், அப்படியே முத்தமிடலாமா என்றிருக்கிறதே! இப்பொழுது நம்மிருவரையும் நிலைக்கண்ணாடியில் நோக்கினால் என்னமாயிருக்கிறது பார்ப்போம்! மதனனும்—

சா. அம்மணி, நேரமாகிற தம்மணி! புறா எங்கே? அது இந்நேரம் உணவின்றி வருந்துமே!

சி. என்னை 'அம்மணி' என்றழைத்தால் புறாவைத் தரமாட்டேன்.

சா. பின்னை என்னவென் றழைப்பது? 'அம்மா' என்றழைக்கவா? 'சின்னம்மா' என்றழைக்கவா?

சி. விளையாடாதீர்! உம்முடைய மனைவியை என்னவென்று அழைப்பீர்?

சா. [திடுக்கிட்டு] அதையேன் இப்பொழுது கேட்கிறீர்?

சி. இல்லை, உமக்குச் சாளுவதேசத்தரசன் மகளைச் சீக்கிரம் விவாகஞ் செய்யப் போகிறார்களாமே; அப்படி விவாகமானால் என்ன வென்றழைப்பீரென்று கேட்டேன். வேறொன்றுமில்லை.

சா. இப்பொழுது எனக்கு விவாகம் வேண்டாமென்று பிதாவிடம் சொல்லிவிட்டேனம்மணி. ஆகும்பொழுது பார்த்துக் கொள்வோம்.

சி. இப்பொழுதே எல்லாம் பழகி வைக்கவேண்டாமா? ஆனால், என்ன வென்றழைப்பீர்?

சா. இதையெல்லாம் ஏன் அம்மணி கேட்கிறீர்?

சி. சரி! உமக்கு இஷ்டமில்லாமற்போனால் போம்.—புறாக்களையெல்லாம், வேறு யாருக்காவது—

சா. இல்லை, இல்லை அம்மணி,—

சி. சொல்லும் இல்லாவிட்டால்.

சா. உம்—'பெண்ணே' என்றழைப்பேன்.

சி. அப்படி யழைத்தால் அவள் திரும்பியும் பாராள், 'கண்ணே' யென்றழையும்?

சா. யாரை யழைப்பது ?

சி. என்னைத்தானழையும். என்னை உமது மனைவியென்று எண்ணிக்கொள்ளுமே.

சா. ஏன் அப்படி எண்ணிக் கொள்ளவேண்டும் ? அப்படி எண்ணவே மாட்டேன் !

சி. இதுதானே ? நான் புறுவை கொடுக்கமாட்டேன். வேடிக்கைக்கு எண்ணுமென்றால் கோபம் வருகிறதே !

சா. இல்லை அம்மணி.—என்னடா கஷ்டமாய் முடிந்தது ! சுமந்திரன் வருந்திக் கொண்டிருப்பான்,—

சி. எதோ, அழையும் 'கண்மணி' யென்று.

சா. கண்—மணியே ! புறுவைத் தாரும்.

சி. தருகிறேன் இதோ ! அப்படியழைத்தால் உதவுமா ? 'கண்மணியே' என்றழையும்.

சா. கண்—மணியே !

சி. உம்—கண்மணியே !

சா. கண்மணியே !

சி. ஆ ! அப்படியழைத்தால் உமது மனைவி என்ன செய்வாள் தெரியுமா ?

சா. தெரியாது.

சி. சொல்லட்டுமா ?

சா. உம்—புறு எங்கே ? பசியுடன்—

சி. [பின்புறம் நின்று அவனை முத்தமிட்டு] இதைத்தான் செய்வாள்.

சா. [திடுக்கிட்டு] அம்மா, இதென்ன இது ?

சி. ஒன்றுமில்லை. உமது மனைவி என்ன செய்வாளென்று காண்பித்தேன். தவறென்ன இருக்கிறது இதில் ?

சா. அம்மணி, தாம் என்னை முத்தமிடலாமா ?

சி. ஏன் ஆகாது ?

சா. தாம் எனது சிற்றன்னையன்றோ ?

சி. அன்று, அன்று.—இல்லை அப்படிச் சிற்றன்னைதான் என்று ஏற்றுக் கொள்வோம். உமதன்னை உம்மை முத்தமிடுவதில்லையா ?

சா. ஆம், இடுகிறார்கள்.

சி. நான் சிற்றன்னையாயின் அப்படிச் செய்வதில் என்ன தவறு உம்முடைய நியாயப்படியே ?

சா. அம்மா, நீர் என்னை முத்தமிடுவது எனக்கிஷ்டமில்லை.

சி. இல்லையா ? ஆனால் நான் கொடுத்ததைக் கொடுத்துவிடும்.

சா. என்ன கொடுத்தீர் ?

சி. நான் உமக்கு முத்தம் கொடுத்தேனே, அதைக் கொடுத்துவிடும் உமக்கிஷ்டமில்லாவிடின். இஷ்டமிருந்தால் வைத்துக் கொள்ளும். இஷ்டமா, இல்லையா ?

சா. இஷ்டமில்லை.

சி. இல்லாவிட்டால் எனக்குக் கொடுத்துவிடும்.

சா. அப்படிச் செய்வது வழக்கமா, நியாயமா ?

சி. வழக்கமும் நியாயமும் அப்படித்தான். என்னிடமிருந்து மாத்திரம் வாங்கிக் கொள்ளலாமா ? பிறகு பெரும்பாவம் சூழும், கொடுத்துவிடும்.

சா. என்னடா கஷ்டமாயிருக்கிறது !

[முகத்தைக் கோணிக்கொண்டு மெல்லத் திரும்பி முத்தமிடுகிறான்.]

சி. [அவனது கரத்தைப்பற்றி] பிராணநாதா, அகப்பட்டீர் என்கையில், இனி உம்மை விடேன். இன்றே என் விரதம் பலிதமாயிற்று. பிராணநாதா, என் மனோரதத்தை இன்றெப்படியாவது பூர்த்தி செய்யவேண்டும்! இத்தனை நாள் பிடித்ததா இதற்கு ? உம்முடைய மனந்தான் என்ன கல்லோ ? நான் எவ்வளவோ எடுத்துக்கூறியும், வெளிப்படையாய்க் கூறியும் அறியாதவர்போல் பாசாங்குசெய்து வந்தீரே! இதிலுமக்கொரு இன்பமா ? இனி நீர் என்னை விவாகஞ் செய்துகொள்வதாகச் சத்தியம் செய்து கொடுத்தாலொழிய விடேன் உம்மை.

சா. [அவள் கரத்தினின்றும் திமிறிக்கொண்டு] அம்மணி! இதென்ன இது !

சி. இனி 'அம்மணி' உதவுமா கண்மணி !

சா. சற்றுத் தூரத்தில் நில்லும் அம்மணி!

சி. பிராணநாதா, உம்முடைய மனைவியை நீர் 'அம்மணி' யென்றழைப்பது நியாயமன்று. காதலா! உமது படத்தைக்கண்டு காதல்கொண்டு உம்மையே நான் புருஷனாகக் கோரினேன். வேறொரு புருஷனை நான் கனவிலும் எண்ணினவளன்று. ஆகவே நான் உம்முடைய மனைவியே! நீர் எனக்குப் பிராணநாதரே! இதோ! பிராணநாதா! எனக்கொரு முத்தம் தாரும்.

சா. தொடாதீர் அம்மணி என்னை!—ஐயோ! நான் என்ன மதிமோசம்போனேன்! சுமந்திரன் கூறியதுண்மைதான்—அம்மா எனது புருவைத் தாரும், இனி ஒரு க்ஷணமும் நான் இங்கிருப்பது நியாயமன்று!

சி. எங்கே போகப் பார்க்கிறீர்? கதவைத் தாளிட்டு விட்டேன். என் கையினின்றும் இனித்தப்பமாட்டீர். என்னை மணம் புரிவதாக வாக்களித்தாலன்றி உம்மை வெளியில் விடேனின்று. தருகிறேன் புருக்களைவாரும்.—பிராணநாதா, இந்த மோடிசெய்வது தமக்கழகன்று. நானாக நாணம் விட்டு இவ்வளவு வேண்டியும் உமது மனமிளகாதது என்ன நியாயமோ? என் மனத்தை இவ்வாறு வருத்துதல் உமக்கழகன்று. [அருகிற் செல்ல சாரங்கதரன் ஒரு புறமாய் ஓடுகிறான்.] சரி, எங்கே போகப்போகிறீர் என்னைமீறி? இவ்வறையை விட்டு எப்படிப் போகிறீரோ பார்ப்போம்.

[கதவருகிற் போய் உட்கார்ந்து கொள்ளுகிறாள்.]

சா. ஐயோ! அம்மா! இதென்ன ஆச்சரியம்! நான் என்ன செய்வதிப்பொழுது!—எப்படித் தப்புவது?—ஐயோ! கொடும்பாபி நான், சுமந்திரன் கூறியதை அப்பொழுதே கேட்டிராமற் போனேனே!—அம்மா! இது உமக்கு நியாயந்தானா?

சி. இது உமக்கு நியாயந்தானா?

சா. எது?

சி. பெண்சாதியை அம்மா வென்றழைப்பது?

சா. ஐயோ! நான் உமது புருஷனல்லவே? மகனாயிற்றே!

சி. எப்படி மகன்? நான் உம்மைப்பெற்ற தாயா? அல்லது பால் ஊட்டின தாயா? உண்பித்த தாயா? எடுத்து வளர்த்த

தாயா? குருவின் மனைவியோ? உமது நண்பன் தாரமோ? தகப்பனுடைய பெண்டோ? உமது மாமனாரின் மனைவியோ? அல்லது ஆபத்தினின்றும் ஈடேற்றினவனுடைய பெண்சாதியோ? அல்லது எப்படி சொல்லும்.

சா. என் தந்தை விரும்பியவர்களாயிற்றே.

சி. அதை நான் உமக்கு எத்தனை முறை எடுத்துரைப்பது? இதோ கடைசி முறை கூறுகிறேன். உம்முடைய தந்தையை நான் விவாகஞ்செய்து கொள்ளவுமில்லை, இனி விவாகஞ் செய்துகொள்ளப் போகிறதுமில்லை, என்னுயிருள்ளளவும், இது சத்தியம். சரிதானா? இனி என்ன சொல்லுகிறீர்?

சா. அம்மா, இந்த நியாயங்களெல்லாம் உதவாது! ஐயோ! உமது வேண்டுகோளுக் கிப்பொழுது நான் இசைவேனாகில் என் பிதாவுக்கு நான் துரோகம் செய்தவனாவேன். பெற்றெடுத்த பிதாவுக்குத் துரோகம் செய்து, சிற்றன்னையைக் கைப்பிடித்த பாபி, என்று என்னை உலகத்தோரெல்லாம் பழிப்பார்களே! என்னை என் மாதாவும் திரஸ்கரிப்பார்களே! முடிவில் நான் பாழ்நரகில் உழலவேண்டிவருமே! ஒரு குற்றமுமறியாத பேதையாகிய என்னை இத்தீமைகளுக் கெல்லாம் ஆளாக்குதல் உமக்கழகோ? நீரோ சித்திராங்கத ராஜனுடைய புத்திரி, உமக்குத் தெரியாத நியாயமா? அம்மா! அம்மா! எப்படியாவது இப்பழிவந்தென்னைச் சேராவண்ணம் காப்பாற்றியருளும், காப்பாற்றியருளும்!

சி. அப்படி உம்மை ஒருகுற்றமுஞ் சேராது! உமது பிதாவை நான் சமாதானப்படுத்திச் சரிப்படுத்துகிறேன், என்னை உமக்கே விவாகஞ் செய்துகொடுக்கும்படி செய்கிறேன்; அன்றியும் க்ஷத்திரியர்களாகிய நமக்குள் காந்தர்வமணமே சிறந்தது. நானோ கன்னிகை, என்னைக் காந்தர்வமணம் புரிவதற்கென்ன தடை? இப்பொழுது என் வேண்டுகோளுக் கிசையாவிட்டாலன்றோ உம்மைப் பெரும்பழி சூழும்! உலகத்தோர் நகைப்பார்கள். என்னுடைய வேண்டுகோளுக் கிசையாவிட்டால் உம்மை நான் இன்று விடப்போகிறதில்லை. ஏன் மயங்குகிறீர்! வேறு வழியில்லை.

சா. அம்மா, நான் சொல்வதைச் சற்றுக் கேளுமே. அம்மணி! பாலனென என்மீது கருணைவைத்து போக வழிவிடும். என் புறவும் வேண்டாம் ஒன்றும் வேண்டாம்! நீர் பெற்றெடுத்த பாலனென என்னை நினைத்துச் சற்று வழியிடு மம்மணி! என்மீது அவ்வளவு தயையில்லையா? கருணையில்லையா? கிருபையில்லையா? பச்சாத்தாபமில்லையா?

சி. என்மீதுமக்குத் தயையில்லையே, உம்மீது எனக்கேன் தயை பிறக்கவேண்டும்? நீர் கூறுவது ஒன்றும் எனக்கு நன்றாய் விளங்கவில்லை. அருகில் வந்து கூறுமே. நானென்ன பேயா பிசாசா? உம்மை விழுங்கிவிடப் போகிறேனா என்ன? வாரு மருகே.

சா. என்னை ஒன்றும் செய்யாத பட்சத்தில் வருகிறேன்.

சி. ஒன்றும் செய்யவில்லை, வாரும்.

சா. [அருகில் நெருங்கி] அம்மா—

சி. என்ன சொல்கிறீர்? இன்னும் அருகில் வாரும்.

சா. கதவைத் திறந்துவிடும், வருகிறேன்.

சி. திறக்கிறேன், வாரும் இப்படி.

சா. ஈசனே!— [அருகில் செல்கிறான்.]

சி. [அவன் கரத்தைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு] இப்பொழுதென்ன சொல்லுகிறீர்?

சா. அம்மா, வேண்டாம், வேண்டாம். என்னை விட்டுவிடும்!

சி. என்னாசைதீர ஒரு முத்தங் கொடும், விட்டுவிடுகிறேன்!

சா. அப்படியாவது செய்கிறேன். அதனுடன் விட்டு விடும். [முத்தமிடுகிறான்.]

சி. [அவனைக் கட்டியணைத்து] பிராணநாதா, இனி நான் உம்மை விடுவேனா? கைக்கெட்டியபின்பு விட நான் என்ன பைத்தியக்காரியோ? ருசி கண்டபின்பு விடுவதா? இனி நீர் என் மனோபீஷ்டத்தைப் பூர்த்திசெய்தாலன்றி விடேன்.

சா. அம்மா, அம்மா! வேண்டாம். என்னை மோசஞ்செய்யாதீர், மோசஞ் செய்யாதீர்! வீண் பழிக்கு இடமுண்டாகும். இவ்வற்ப சுகத்தால் பிறகு பெரும்பழியையும் பெரிய அபகீர்த்தியையும் அடைவீர். ஐயோ! உம்மை இரந்து வேண்டுகி

றேன், வேண்டுகிறேன்! இதைவிட என்னை முன்பு கொன்று விடுமே? அம்மா! அம்மா! அம்மா! வேண்டாம்! வேண்டாம்! அம்மணி! அம்மணி!

சி. பிரயோஜனமில்லே. இனிப்பேசாதீர், வாரும்.

சா. அப்படியே—ஆகட்டும் இதோ வருகிறேன்—சற்றுவிடும்.

[மெல்ல அவள் கையினின்றும் விடுவித்துக்கொண்டு சரேலென்று பாய்ந்து ஒரு மூலேயில் வைத்திருந்த வாளொன்றை எடுத்துக் கொள்கிறான். சித்திராங்கி திடுக்கிட்டு அவன் கச்சையைப் பற்றுகிறாள்.]

சீ! விடு பாதகி! [கச்சையை வாளால் வெட்டி யெறிந்து] பாதகி! தப்பினேன் பார்த்தாயா உன் கையினின்றும்! இப்பொழுது என்ன சொல்கிறாய்? சீ! உன்னைக் கற்புடைய அன்னையெனக் கருதி இங்குவந்ததற்கு இக்கோலம் காட்டினாயல்லவோ! ஈசனருளால் நான் பழியினின்றும் தப்பினேன் பார்த்தனையா? என்னருகில் வந்தால் கொன்று விடுவேனுன்னை!

சி. சாரங்கதரா! மோசஞ் செய்தாயென்னை உண்மையே! ஆயினும் என்னுவியை நீ அழித்ததுபோல உன்னுயிருக்கே உலே சீக்கிரம் வைக்காவிட்டால் என்பெயர் சித்திராங்கியன்று!

சா. ஈசன் இருக்கிறார். பார்த்துக்கொள்வோம். நான் அஞ்சவில்லே எதற்கும்! அவர் விதித்தவிதி ஆகிறது.

[வாளேக் கொண்டு கதவைப் பெயர்த்துக்கொண்டு போகிறான்.]

சி. [தரைமீது விழுந்து] ஐயோ! என்னமதி மோசம் போனேன்! நான் இத்தனை நாளாகக் கோரிய எண்ணமெல்லாம் பாழாயிற்றே! கைக்கெட்டியும் வாய்க்கெட்டாமற் போயிற்றே! என் ஜன்மத்தை என்னென்று சொல்வது! முன் ஜன்மத்தில் கணவன் பெண்ஜாதியை எவ்வாறு வயிறெரியப் பிரித்தேனோ அப்பாபம் என்னை இந்த ஜன்மத்தில் வந்திவ்வண்ணம் சூழ்ந்தது! ஆ! நாணம்விட்டெவ்வளவோ வருந்திக் கேட்டும் என்ன பயனடைந்தேன்! சீ! இனி மானம்போன பின்பு இப்புவியில் நான் உயிருடனிருப்பது நியாயமன்று. ஆயினும் என்னை இக்கோலங்கொண்ட ராஜகுமாரனை இலேசாகவா

## நான்காங் காட்சி.

இடம்—ரத்னாங்கியின் மாளிகை. காலம்—காலை.

ரத்னாங்கி சாரங்கதரனைக் கட்டிக்கொண்டு அழுதவண்ண மிருக்கிறாள்.

சுமந்திரன் ஒருபுறம் தலைசாய்த்து நிற்கிறான்.

ர. கண்ணே! கண்ணே! இப்படியு மிருந்ததா உன் கதி? இப்படி வருமென்று முன்பேநினைத்தேனே, நினைத்தவண்ணமே முடிந்ததே! சாரங்கதரா! அப்பாபி மனைக்கேன் சென்றாய்? ஐயோ! அவள் விஷயம் நீ ஒன்றும் அறியாதிருக்கவேண்டுமென்று நான் செய்த முயற்சிகளெல்லாம் வீணாயினவே! உன் தீவினை உன் பிடரியைப்பற்றி அங்கு உந்தியதே! நீயாகச் சென்று அவள்கையி லகப்பட்டனையே! கண்ணே! இனி என் செய்வது? என் கண்மணியே! [தேம்பி அழுகிறாள்.]

சா. அம்மா! உம்மீது ஆணைப்படி, என்மீது ஒரு குற்றமுமில்லை.

ர. கண்ணே! அதை நீ எனக்குக் கூறவும் வேண்டுமா? உன் முகத்தைப்பார்த்து எந்தப் புத்தியில்லாப்பாவியும் அறியாப் பேதையென்று சொல்லிவிடுவானே! நீ ஒரு கெட்ட காரியத்தைக் கனவிலும் நினைக்கமாட்டாயென்று எனக்குத் தெரியாதா? ஆயினும் நாம் என்னசெய்வ திப்பொழுது? சித்திராங்கியோ உன்மீது கொடிய பழியைச் சாற்றிவிட்டாள்? மஹாராஜாவும் விசாரியாமல் உன்னைக்கொன்றுவிடும்படி கட்டளையிட்டு விட்டாராமே! கண்ணே! சாரங்கதரா! இவ்விதிக்கு நான் என்னடா செய்வேன்? நீ அநியாயமாய் இறக்க நான் கண்டு எப்படிஉய்வேன்? அம்மாயக்கள்ளி சூதினால் நீ வீணிலிறக்க, நான் பெற்ற வயிறெரியப் பார்த்துக் கொண்டிருப்பதோ? உன் பிதாவுக்குத்தான் பெற்ற பிள்ளையென்றும் பச்சாத்தாப மில்லாமற் போயிற்று! தெய்வத்திற்கும் கண் கெட்டு விட்டதே! கண்ணே! மைந்தா! பாலகா! உன்னை—நிரபராதியாகிய உன்னை—இக்கோலத்திற்குக் கொண்டுவந்து விட்டதே, இனி நான் என்ன செய்வேனடா?

சும. இன்னும் ஒன்றும் மிஞ்சிவிடவில்லை. சற்றுப்பொறும். மஹாராஜாவை நேரிற்கண்டு பேசிப் பார்ப்போம். நியாயம் எப்படி

விட்டு விடுவது ?—ஐயோ ! பாபம்! சாரங்கதரன்மீது என்ன குற்றம் இருக்கிறது ? பழிக்கஞ்சிச் சென்றார் பாபம். என்னுடைய துரதிர்ஷ்டமல்லவோ இது! விதியே! விதியே!

[தேம்பி அழுகிறாள்.]

மதனிகை வருகிறாள்.

மத. [தனக்குள்]நாம் எண்ணியவண்ணமே முடிந்தது! வேண்டும்!—அம்மா, என்ன அழுது கொண்டிருக்கிறீர்கள் ? என்ன சமாசாரம் ? சாரங்கதரராஜன் எங்கே ?

சி. மதனிகா, நான் எண்ணிய எண்ணங்களெல்லாம் வீணாயினவே ! என் கோரிக்கையெல்லாம் பாழாயிற்றே ! என் விரதமெல்லாம் அழிந்ததே! கைக்கெட்டி விட்டது, இனி பயப்பட வேண்டியதில்லையென்று இருமாந்திருந்ததற்கு, இப்பொழுது கையினின்றும் ஏமாந்து நழுகவிட்டுத் துயரப்படலானேனே !

மத. என்ன சமாசாரம் ? சாவதானமாய்ச் சொல்லுங்கள்.

சி. சாரங்கதரன் இங்குவந்து என் கையிற் சிக்கியும் தப்பிச் சென்றார்.

மத. எப்படி? விளங்கச் சொல்லும் சற்று.

சி. இங்குவந்த பிறகு நான் முதலில் எவ்வளவோ குறிப்பிற்சொல்லிப் பார்த்தேன். பிறகு எவ்வளவோ வினயமாகக் கூறிப் பார்த்தேன். ஆகட்டுமென்றிசைவதுபோ லிசைந்து திடீரென்று இங்கிருந்த ஒரு வாளை யெடுத்துக்கொண்டு நான் பற்றியதன் கச்சையை யறுத்துக்கொண்டு பூட்டிய கதவையும் திறந்து கொண்டு ஓடிவிட்டார்.

மத. அம்மா, இப்பொழுதென்ன செய்ய யோசிக்கிறீர் ?

சி. என்ன செய்வது ? இறப்பதே ! இனி நான் மண்மீதிருந்தென்ன பலன் ? மானங் கெட்டபின் வாழ்வதா ? ஆயினும் மதனிகா, அவருடைய மனந்தான் என்ன கருங்கல்லோ ? இன்னொரு புருஷனானால் அப்பொழுதே அந்த க்ஷணமே இணங்கியிருப்பானே ! எனக்கென்ன அழகில்லையா ? அறிவில்லையா ? ஈனகுலத்திலுதித்தவளா ? க்ஷத்திரியனாயிற்றே என்று காந்தர்வ மணம்புரியும்படி வேண்டினேன். அவ்வளவு

தானே? அதில் என்ன தவறு? ஆ! தோழி, நான் அவர்மீது கொண்டிருந்த காதல் என்ன? அவர் என்னைக்கண்ட கோல மென்ன? இவைகளையெல்லாம் எண்ண எண்ண எனக்கு நெஞ்சம் பகீரென் றெரிகிறதடி!

மத. எரியாதா பிறகு, கேட்கும்பொழுதே அனலிலிட்ட புழுவைப் போல் துடிக்கிறதே, நேராக அனுபவித்தவர்களுக்கு எப்படி யிருக்கும். அம்மணி, இந்தப் படுவாவியைச் சும்மாவாவிட்டு விடப் போகிறீர்கள்?

சி. நான் என்ன செய்வது?

மத. என்ன செய்வதாவது? என்னை இக்கோலங் கண்டிருந்தால் அந்தக்ஷணமே அவரதுயிருக்கு உலை தேடி யிருப்பேன். தன்மீதே காதல்கொண்டு தன்னையன்றி வேறொரு புருஷனை யும் கனவிலும் நினையாத பெண், தானாகவந்து மானமெல்லாம் விட்டு வேண்டியும், வெறுத்துச் செல்வதா? இபபடிப்பட்ட காதலியை விட்டு, யாரோ சாளுவதேசத்தரசன் மகளாம், அவளைப்போய் விவாகம்செய்துகொண்டு, அவளுடன் சுகமனு பவிப்பதோ?

சி. ஆம், ஆம்! அதை யெப்படியாவது தடுக்கவேண்டும், அதற் கென்ன செய்வது?

மத. என்ன செய்வதாவது? இப்படித்தான் ஒரு புருஷன் என்னை விவாகஞ் செய்துகொள்ளமாட்டேன் என்றான். உடனே அவன் நம்முடன்கூடி வாழாவிட்டால் மற்றொருத்தியுடன் சுகமனுபவிப்பதா என்று அவனுயிருக்கே வழி தேடினேன்.

சி. ஐயோ பாபம்! யோசித்துப் பார்த்தால் சாரங்கதரன்மீது ஒரு குற்றமுமில்லையே. என் துரதிர்ஷ்டத்திற்காக வீணாக அவ ருக்கு ஏன் தீங்கிழைக்கவேண்டும்? அப்படி யேதாவதுசெய்ய வேண்டுமென்றாலும் என்னா லென்ன முடியும்?

மத. இதென்ன அம்மா, இப்படிக் கூறுகிறீர்கள்? இன்னும் பெரிய குற்றம் நமக்கென்ன செய்யவேண்டும்? நீர் தானாக அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் நான்கையும்விட்டு வேண்டி யும் வெறுத்துச் சென்றதைவிட இன்னும் என்ன குற்றம் செய்யவேண்டும்? நீர் சுகிக்கக் கருதிய புருஷன் வேறொருத்தி

யுடன் சுகிப்பதா ?—அன்றியும் உம்முடைய மகிமை உமக்கே தெரியாது. இப்பொழுது வேண்டுமென்றால் ஒரு க்ஷணப் பொழுதில், சாரங்கதர னிங்குவந்து என்னை பலவந்தப்படுத்திக் கற்பழித்துச் சென்றான் என்று ஒரு வார்த்தை கூறும், பிறகு மஹாராஜா சாரங்கதரனை என்ன பாடுபடுத்துகிறார் பாரும்.

சி. அவரை வருத்துவதினால் இனி நமக்கென்ன பலன் ?

மத. அப்படியல்ல, ஒரு வேளை மஹாராஜாவே பார்த்து, காரியம் மிஞ்சிவிட்டதே, இனி யென்ன செய்யலாமென்று, "நீ சித்திராங்கியின் கற்பை யழித்தமையால் நீயே அவளை மணம் புரிய வேண்டும்" என்று கூறி அவ்வண்ணம் தம்மை மணம் புரியும்படி கட்டளையிட்டு பலவந்தித்தாலும் பலவந்திப்பார்.

சி. ஆம் ஆம் ! மதனிகா, இதுவே நல்ல யோசனை. அப்படியே செய்வோம்.

மத. இதோ பாரும். இதோ கிடக்கிற கச்சைத் துண்டைக் கொண்டே பழி போடலாம் நாம்.

சி. ஆம்.—அப்படியே செய்.

மத. நீர் தலைவிரிகோலமாய் அலங்கோலத்துடனிருக்கவேண்டும். மஹாராஜா வந்தவுடன் சாரங்கதரன் வந்து பலவந்தப்படுத்திச் சென்றான் என்று மாத்திரம் முறையிடும். மற்றெல்லா விஷயங்களையும் நான் பார்த்துக்கொள்ளுகிறேன்.

சி. அப்படியே ! அப்படியே !

மத. வாரும் உள்ளறைக்கு, சொல்லுகிறேன். [போகிறார்கள் .]

---

## மூன்றாங் காட்சி.

இடம்—அந்தப்புரத்தில் சயனக்கிருஹம். காலம்—இரவு.

சித்திராங்கி சயனத்தின்மீது தலைவிரி கோலமாய்க் கிடக்கிறாள்.

ந. [உள்ளிருந்து] ஆ! ஆ! அப்படியா செய்தான் அப்பாதகன் ?

நரேந்திரனும் மதனிகையும் வருகிறார்கள்.

எங்கே சித்திராங்கி?—சித்திராங்கி! உன்னை இக்கோலங்கண்ட அப்பாதகனை என் பிள்ளையென்றும் பாராமல் தக்க தண்டனை விதிக்கிறேன்! இந்த க்ஷணம் சிரச்சேதம் செய்துவிடும்படி கட்

டளையிடுகிறேன். நீ நடந்த விஷயங்களையெல்லாம் ஆதியோ டந்தமாகச் சொல் சீக்கிரம். என் கோபம்பற்றி யெரிகிறது !—

மத. அம்மா, அழாதீர். நாம் என்ன செய்யலாம்? நடந்துவிட்டது. இனி அப்பாபியைச் சிட்சிக்கும் விதத்தைப் பார்ப்போம். வருந்தாதீர், அழாதீர். சொல்லும்—

சி. [எழுந்திருந்து நரேந்திரன் பக்கத்தில் வீழ்ந்து] மஹாராஜா ! மஹாராஜா! நான் சித்திராங்கதனுடைய பெண்ணுய்ப் பிறந்து உம்மை மணம்புரிய இங்கு வந்ததற்குத் தக்க கதியைப்பெற்றேன்! இனி இவ்வுடல் இருந்தென்ன பலன்? என் கற்பழிந்தபின் நான் உயிர் வாழ்வதோ? எனக்கு இறக்க உத்தரவளியும். அதற்கே உம்மை நான் இங்கு வரவழைத்தது. நானினி உயிர் வாழேன், வாழேன்! மானம் போனபின் மாது நான் மண் மீதி லிருப்பேனே!—ஈசனே! ஈசனே! இப்படியும் இருந்ததா என்கதி ?

ந. பெண்ணே சித்திராங்கி, அழாதே! அழாதே! நீ வருந்துவதைப் பார்த்தால் எனக்கும் துக்கம் வருகிறது! நடந்ததைச் சொல் சீக்கிரம், சீக்கிரம் !

சி. ஐயோ! என் அவமானத்தை நானேதான் கூறவேண்டுமோ! உயர்ந்தக்ஷத்திரிய குலத்திற் பிறந்ததற்குத்தக்க பலனையனுபவிக்கிறேன்! ஐயோ! நான் என்னென்று சொல்வேன் அப்பாதகன் செயலை? என்னைத்தனது சிற்றன்னையென்றேனும் பாராத பாபி! அல்லது பெண்ணுயிற்றே என்றாகிலும் நினையாத தோஷி! என் கற்பை யழித்தானே! என் சொல்லை இழித்தானே! என் குலத்தைப்பழித்தானே! இதற்கோ இத்தொல்குலத் துதித்தானே!—ஆ! நான் இதுவரையில் கற்புடையமாதென்று பெயர் பூண்டிருந்ததெல்லாம் இனி என்னவாகும்? பலர் நகைக்க வைத்தானே! உலகம் சிரிக்க முடித்தானே! சிற்றன்னையைப் பிடித்தானே! என்பிதா புகழை ஒழித்தானே! என்மானத்தைக் கருதாவிட்டாலும் தன் தந்தையாகிய உமது மானத்தையாவது நோக்கினனா? உலகம் பழிக்குமென்றாவது நெஞ்சில் நினைத்தானா? அல்லது தன் குடிப்பிறப்பையாவது எண்ணினனா? பாபி! சண்டாளா! தோஷீ! நீ என்னை இக்கோலம் கண்டு என்ன பயன்

பெற்றாய்? அரை நிமிஷத்துச் சுகத்திற்காக என் உயிரை மாய்க்க வைத்தனையே! நீ சுகமடையப் போகிறாயா? பாபி! பாபி [தேம்பி அழுகிறாள்.]

ந. சித்திராங்கி, சற்று மனத்தைத் தேற்றிக்கொண்டு நடந்த வரலாற்றைச்சொல்!

சி. மஹாராஜா, உம்மைநான் சீக்கிரம் மணம்புரிய வேண்டுமென்று, என்னை மணம்புரிய விரும்புவோர்க்கு ஒரு தீங்குநேரிடுமென்று என் ஜாதகத்தில் எழுதியிருந்த படியால் அத்தீங்கு உம்மை வந்தணுகாதிருக்கும் பொருட்டு, நான் நோன்பு நோற்றுவந்தே னல்லவா? அப்படியிருக்கும் சமயத்தில் நேற்றைத்தினம் மத்தியானம் அப்பாபியினுடைய புறா இங்குவர, அழகாயிருக்கிறதே சற்றுப்பார்க்கலாமென்று பிடித்தேன். இதற்குள் அவன் தூதரையனுப்ப, ஐயோபாபம், இவ்வளவழகிய புறாவுக்கேதாவது கெடுதிசெய்வார்களே அவர்கள் கையிற் கொடுத்தாலென்று நினைத்து, அவன் வரட்டும் அவன் கையிலேயே கொடுக்கிறேன் என்று சொல்லியனுப்பினேன். அதுவுமன்றி அவனை வரவழைத்து உம்முடைய கட்டளைக்குக் கீழ்படிந்து அந்தச் சாளுவதேசத்தரசன் மகளை மணம்புரியச் சொல்லலாமென்று நேரிற் பார்க்க விரும்பினேன். உம்முடைய குமாரனாயிற்றே நமக்கும் குமாரன்தானே, நமக்கென்ன தீங்குசெய்யப்போகிறான், என்று மதிமோசம்போய், அவனையிங்குவரச் சொன்னேன். மஹாராஜா! மஹாராஜா! உமது குமாரன் எனக்குமறலியாய் இப்படிமுடிவானென்று நான் கனவிலும் எண்ணியிருப்பேனாயின் அப்பாபியை என் கண்முன் வரவிட்டிருப்பேனோ? வந்ததும், அப்பாபி!—[தேம்பித்தேம்பி அழுது] மஹாராஜா, எனக்கு நாஎழுவில்லையே!—என்மனம் பதறுகிறதே!—

ந. வருந்தாதே! சொல், சொல் சீக்கிரம்!

சி. மைந்தனாயிற்றே என்று வரவழைக்க மறலியாய் முடிந்து, வந்ததும் உம்மைக் கிழவன் என்று ஏளனம் செய்து—தன்னை—சேரும்படி கேட்டான்—நான் எவ்வளவோ நியாயமெடுத்துரைத்தும் கேளாது பலாத்காரஞ் செய்யத்தொடங்கினான். ஐயோ! நான் அப்பாதகன் கையிலகப்பட்டு எமன்கையிலகப்

பட்ட உயிரைப் போலவும், கடும்புலிவாயில் அகப்பட்ட இள மானைப் போலவும், பாம்பின் வாயில் அகப்பட்ட தவளையைப் போலவும் எவ்வளவோ பதறினேன்! எவ்வளவோ கதறினேன்! எவ்வளவோ வருந்தினேன் ! எவ்வளவோ வேண்டினேன் ! எவ்வளவோ நியாயமெடுத்தோதினேன் ! சிற்றன்னை யாயிற்றே, உமது பிதாவின் மனைவியாயிற்றே, என்றும் கூறினேன் அப்படியானால் மிகவும் சந்தோஷம் என்று நகைத்து, என் னைக் கைப்பிடியாய்ப் பிடித்து, என் கற்பை யழித்தானே !— பாபி ! பாபி ! [கீழே புரண்டழுகிருள்.]

மத. அம்மா, மனே தைரியத்தைக் கைவிடாதீர். நாம் என்ன செய் யலாம் ? எழுந்திரும் ! துஷ்டரைத் தண்டிக்க ஈசனொருவன் இருக்கிருன் !—நாம் என் செய்வது ? நமது விதி ! வருந்தா தீர் ! அழாதீர் !—

ந. ஆஹா ! நான் என்ன மதிமோசம் போனேன்! அவன் ஒன்று மறியாதவனென் றல்லவோ எண்ணியிருந்தேன் இதுவரை யில் ! நான் இந்நாட்டிற்கு அதிபதியாயிருந்து என் மைந்தன் இவ்வாறு நடப்பதா !

மத. மஹாராஜா ! அதைத் தான் நானும் கூற வாயெடுத்தேன். தாம் பூமண்டலசக்கிராதிபதியாயிருந்து பரிபாலனம் செய்யத் தமது மகனே இவ்வாறு அகோர துர்க்கிருத்தியம் செய்தால், மற்ற பிரஜைகளெல்லாம் என்ன செய்யார்கள் ? உலகம் உம் மைப் பார்த்து நகைக்காதோ ? பாபி, சண்டாளன்! மற்றெ தையும் பாராவிட்டாலும் சிற்றன்னையென்றுகிலும் பாரானு ? இதைப் பார்க்கிலும் மஹா பாதகமென்ன இருக்கிற திவ்வுல கில்? தாயைப் பெண்டாளுவதோ ?

ந. இனி என்னல் பொறுக்கமுடியாது ! இப்பாதகனை இனி ஒரு க்ஷணமும் இவ்வுலகின்மீது வைத்திருக்கலாகாது. மதனிகா, நீ இந்த க்ஷணம் சென்று மந்திரி வசுபூதியை யழைத்துவா, போ சீக்கிரம் ! [மதனிகை போகிருள்.] சித்திராங்கி ! நீ வருந் தாதே. நான் மைந்தனென்றும் பாராமல் அப்பாதகனை என்ன பாடுபடுத்துகிறேன் பார் !—மைந்தனுல் என்ன ? இப்படிப் பட்ட மஹா பாதகம் புரிபவன் என் மைந்தனன்று ! மைந்த னென் றவனைக் கூறினும் நரகம் வாய்க்கும் ! சித்திராங்கி,

முகத்தைத் துடைத்துக்கொள். அப்பாதகனுக்கு என்ன சிக்ஷை விதிக்கவேண்டும்? சொல். அப்படியே விதிக்கிறேன். சொல் பயப்படாதே!

சி. [மெல்ல எழுந்திருந்து] மஹாராஜா, நடந்தது நடந்துவிட்டது. கற்பழிந்தபின் வரப்போகிறதா? இல்லையே. அன்றியும் இனி நான் உம்மை விவாகஞ் செய்து கொள்ளலாகாது. அது பெண்களுக் கழகன்று. ஒரு புருஷனுற் றீண்டப்பட்டபின்பு, இன்னொரு புருஷனைக் கனவிலும் நினைக்கலாகாது! இனி நான் என்ன செய்வது? என் கற்பிற்குப் பின்னம் வாராமல்—அச்சாரங்கதரனையே யடைய வேண்டும். ஏதோ அறியாமை யின் கொடுமையாற் செய்திருக்கவேண்டும். நடந்த காரியத்தை மீட்க முடியுமோ? ஆகவே அவரை மன்னித்து என்னைப் பலர் நகையாதபடி—அவருக்கே—

ந. சித்திராங்கி, உனக்கொன்றும் தெரியாது! அவனை மன்னிப்ப தாவது! அவனைக் கொல்வதை விட்டு மன்னிப்பதாவது! அன்றியும்—

வசுபூதியை அழைத்துக்கொண்டு மதனிகை வருகிறாள்.

சித்திராங்கி! நீ உன் மன வருத்தத்தை சற்று அடக்கிக் கொண்டு அந்தப்புரம் செல். நான் அப்பாதகனுக்குத் தக்க தண்டனை விதித்து வருகிறேன். அப்புறம் மேல் நடக்கவேண் டிய விஷயங்களைப்பற்றி பேசிக்கொள்வோம்.

சி. மஹாராஜா! எது எப்படி யிருந்தபோதிலும் சாரங்கதரனை மாத்திரம் கொல்லும்படி தண்டனை விதிக்காதீர்! நான் வேண் டிக் கொள்ளுகிறேன்! ஐயோ பாபம்!—

மத. அம்மணி, நீர் வாரும் உள்ளே, சொல்லுகிறேன்.

[சித்திராங்கியை பலாத்காரமாய் அழைத்துக்கொண்டு போகிறாள்.]

ந. வசுபூதி, நடந்திருக்கும் விபரீதமெல்லாம் தெரியுமா?

வ. தெரியும், மதனிகையிடமிருந்து எல்லா விஷயங்களையும் அறிந்தேன்.

ந. இப்பொழுதென்ன சொல்லுகிறாய்?

வ. நான் சொல்வதற் கொன்றுமில்லை. இளவரசர் கதியைப்பற்றி பரிதாபப்படவேண்டியதா யிருக்கிறது. அவர்மீது குற்ற மென்னவோ நன்றாய் ரூபிக்கப்பட்டிருக்கிறது. முதலில் புறாவை வேண்டுமென்றே இங்குவிட்டிருக்கவேண்டும். அது வன்றியும் சித்திராங்கிதேவி மதனிகை இருவருடைய சாட்சி யுடன், சாரங்கதாருடைய கச்சைப்பட்டையே யிருக்கிறது! ஆயினும் எதற்கும் அவரை அழைத்து நேரில் விசாரித்தால் நலமாயிருக்கும்.

ந. எதற்காக நேரில் விசாரிப்பது? மந்திரி! பெற்றதாயைப் பெண்டாகக்கருதியவனுக்கு என்ன தண்டனை விதிக்கவேண் டும்? சொல்.

வ. மஹாராஜா, இது பஞ்சமா பாதகங்களில் ஒன்றாகும். அன்றி யும் பிறருக்கு நியாயம் செய்யவேண்டிய ஸ்தானத்திலிருக்கு மொருவன் இத்தீங்கைச்செய்தது பாதகத்திலும் மிகவும் பாதகமாம். இது நம்முடைய அரசுக்கே பழிப்பாகும். மஹா ராஜா, இப்படிப்பட்டபாதகஞ் செய்வோரை நேரில் விசா ரிக்கவும் வேண்டியதில்லை யென்று தர்ம சாஸ்திரங்கள் கூறு கின்றன. ஆதலால் சாரங்கதரராஜனை நாம் நேரிலழைத்து விசாரிக்கவேண்டிய நிமித்தியமில்லை. விஷயம் நன்றாய் ரூபிக் கப்பட்டிருச்கிறது. ஆதலால் மைந்தனென்றும் பாராமல் சிர சாக்கினை விதிப்பதே முறைமை.

ந. அப்பாதகனைச் சிரச்சேதம் செய்யும்படி நான் கட்டளை யிட்ட தாகக் கொலையாளிகளிடம் கூறி, உடனே வேலையைச் சீக்கிரம் முடித்துவிடு. ஒரு க்ஷணப்பொழுதும் தாமதியாதே தெரி யுமா?

வ. உத்தரவுப்படி, மஹாராஜா!

ந. நான் சித்திராங்கிக்குத் தேறுதல் சொல்லவேண்டும்.

[போகிறான்.]

வ. சுமந்திரா! உன் நண்பனைக் காப்பாற்றும் வழியைப்பார்.

[போகிறான்.]

யும் வெளிவரும் ; அநியாயம் எப்படியும் அழியும்! நியாயம் அநியாயம்கூற எதற்கும் ஈசனொருவனிருக்கிறான்.

ர. ஈசனுக்குத்தான் மதிகெட்டுப்போ யிருக்கிறதே ! இல்லா விடின் ஒரு பாபமுமறியாத என்னருமைப் பாலனை இக்கதிக் குக் கொண்டுவருமோ ?—ஐ ஐயோ ! சாரங்கதரா ! வருகிறார் களடா உன்னைக் கொண்டுபோக எமதூதர்கள் !

[சாரங்கதரனைக் கெட்டியாய்க் கட்டிக் கொள்ளுகிறாள்.]

இரண்டு கொலையாளிகளுடன் வசுபூதி வருகிறான்.

வ. அம்மணி, என்னை மன்னிக்கவேண்டும். இதோ மஹாராஜா கட்டளை யிருக்கிறது, பார்த்துக்கொள்ளலாம். என்மீது குற்றமில்லை. நான் மஹாராஜாவின் சொற்படி நடக்கவேண்டிய ஊழியன். எனக்கு விடையளிக்கவேண்டும் இளவரசரைக் கட்டிக்கொண்டுபோக.

ர. மைந்தா, தீர்ந்ததடா உன்வேலை! இக்கோலத்தில் உன்னை நான் காணவோ பெற்றேன் ! உன்னை இப்பாதகர்கள் இருப்புச் சங்கிலிகளால் கட்டி, கொலைக்களத்திற் கிழுத்துப்போக நான் எப்படியடா கண்ணாரக்கண்டு சகிப்பேன்? என் மனம் பதறு கிறதே ! என்வயி றெரிகிறதே ! இதற்கென்றோ என் பாவி வயிற்றிற் பிறந்தாய் ? என் பாழும் வயிறு செய்த கொடுமை யடா ! மைந்தா, கொடுமையடா !

சு. மந்திரி வசுபூதியவர்களே, தாங்கள் தான் எங்கள்மீது தயை யில்லாமல் சாரங்கதரராஜனை நேரில் விசாரியாமலே தண்டனை விதிக்கும்படி மஹாராஜாவுக்குக் கூறிவிட்டீர். நாங்களாவது மஹாராஜாவுக்கு நியாயமெடுத்துக் கூறும்படி விடையளிக்க லாகாதா ?

வ. சுமந்திரரே, நீர் ஏதோ தவறாக நினைத்திருக்கிறீர். நான் எடுத் துக் கூறிய நியாயங்களை யெல்லாம் மஹாராஜாகேளேனெனத் தடுத்துவிட்டார் ; நான் என்ன செய்வது ? நீர் வேண்டுமென் றால் போய்ச் சுகமாய்க் கேட்டுக்கொள்ளும். எனக்கொன்றும் ஆட்சேபமில்லை. இளவரசரை மாத்திரம் நேரிற் பார்க்கமாட் டேனென்று கூறிவிட்டார் மஹாராஜா.

சும. அம்மணி, எழுந்திரும். எதற்கும் ஈசனொருவ னிருக்கிறான். நாம் போய் மஹாராஜாவை நேரில் நியாயம் கேட்டுப் பார்க்கலாம், வாரும்.—ஐயா, வசுபூதி, அதுவரையில் இக்கொலையாளிகள் இளவரசருக்கு ஒரு தீங்கும் செய்யாதிருக்கும்படி கட்டளையிடும்.

வ. அப்படியே, அதற்கென்ன? அடே, இவர்கள் சென்று மஹாராஜாவைக் கேட்டுவருகிற வரையில் கொலைக்களத்திற்கு அழைத்துச் செல்லாதீர்கள் இளவரசரை, ஜாக்கிரதை.

சும. அவ்வளவாவது சொன்னீரே!—அரசே, மனோதைரியத்தைக் கைவிடாதீர்! சுவாமி யிருக்கிறார். ஜகதீசனைப் பிரார்த்தியும், பிறகு அவன் செயல்.

ர. கண்ணே! உன் பிதாவின் காலில் வீழ்ந்து நான் வேண்டிப் பார்க்கிறேன்! அதுவரையில் சற்றுன் மனத்தைத் திடமாக வைத்திரு. நான் போய் வரவா?

சா. அம்மணி, தாம் போய்க் கேட்பதில் பிரயோஜனமில்லையென்று தோற்றுகிறதெனக்கு. ஆயினும் உமக்கு அவ்வருத்தமேன்? கேட்டுப் பாரும். நான் இறக்கச் சித்தமாயிருக்கிறேன்.

[ரத்னாங்கியும் சுமந்திரனும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

## ஐந்தாங் காட்சி.

இடம்—நரேந்திரன் அரண்மனையிலோர் அறை காலம்—காலை.

சுந்தரகன், வருகிறான்.

சுந். நாம் சட்டியாகப் பண்ணினால் அது பானையாக முடிகிறது. நாம் ஒன்றாகுமென எண்ணினால் அது என்னென்னவாகவோ முடிகிறது! இருக்கிறதைப் பார்த்தால் மதனிகை நமக்கு நாமம்போடுவாள்போலிருக்கிறது, தப்புநம்மீது! அரண்மனை விதூஷகனுக்கு, வேடிக்கையாய்க் காலம் கழிப்பதை விட்டு இதெல்லாம் என்னவேலை? நம்முடையவேலையை நாம் பார்க்கவேண்டும், மற்றவர்களுடைய வேலையில்தலை நுழைத்துக்கொள்வானேன்? ஆனாலும் இந்த இழவுக்கு என்னசெய்

வது? எப்படியோ சித்திராங்கியம்மாளும் நம்முடைய மதனிகா தேவியும் ராஜகுமாரருக்கு வழி வைத்து விட்டார்கள். ஐயோ பாவம்!—கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன்! ஒரு முறைபட்டது போதும்!—

மதுரகவி வருகிருன்.

ஓஹோ! வாருமையா வாரும். எங்கே? நெடுநாளாயிற்றே உம்மைப் பார்த்து!

மது. ஆம், நானும் உங்களைத் தேடிக்கொண்டிருந்தேன்.

சுந். ஆஹா, என்ன விசேஷம்?

மது. நான் அந்தப் பிரபந்தத்தைப்பற்றி முன்பே சொன்னேனே; அதை மஹாராஜா முன்னிலையில் அரங்கேற்றபடி பண்ண வேண்டும்.

சுந். ஓஹோ! அரங்கேற்றகொடிபோய் அரங்கேற்றபடி யாச்சுதா? சரியாகச் சொல்லுமையா, அரங்கேற்றபொடியென்று.

மது. அரங்கேற்ற பொடியா? மன்னிக்கவேண்டும், எங்கள் தகப்பனர் அதைச் சரியாச் சொல்லவில்லை, அதனல் சந்தேகம். இந்த அரங்கேற்றபொடி—

சுந். ஏ! மறபடியும் பாருங்கள். நான் இப்பொழுது சொன்னதை இதற்குள் மறந்துவிட்டீரே. கொரங்கேற்றபொடி!

மது. கொரங்கேற்ற பொடியா?

சுந். என்னஐயா உமக்கென்ன செவிடா! கொரங்கேற்றபடி ஐயா! கொரங்கேற்றபடி.

மது. கேட்டது ஐயா, கேட்டது! கொரங்கேற்றபடிதான். இது மஹாராஜாவிடம் எப்படிச் செய்வது?

சுந். என்ன செய்வது?

மது. கொரங்கேற்றபடி.

சுந். கொரங்கேற்றபடியா? உமக்கு எத்தனைமுறை ஐயா சொல்வது? சரியாகச் சொல்லி யழுகிறதுதானே! கொரங்கேற்ற கடியென்று.

மது. கொரங்கேற்ற கடியா?

சுந். கொரங்கேற்ற அடி!

மது. கொரங்கேற்ற அடி.—

சுந். குயவன் பெருந்தடி! அப்படிச் சொல்லுங்கள்.

மது. என்ன ஐயா; பரிஹாசமா பண்ணுகிறீர்கள்?

சுந். சே! பரிகாசம் பண்ணுவேனா நான்? விளையாடினேன்! பரி காசமில்லை!

மது. மஹாராஜாவை எப்பொழு திதற்காகக் காண்பது நலம்?

சுந். ஆ, நல்ல யுக்தி! ஐயா, இதை மஹாராஜா சந்தோஷமாயிருக் குஞ் சமயத்தில் பார்த்துச் சொல்லினுற்றான் பெரும் பொருள் அளிப்பார்!

மது. ஆம், ஆம். அதற்கெது நல்ல சமயம்?

சுந். இப்பொழுது தான் நல்ல சமயம். இப்பொழுது மஹாராஜா மிகவும் சந்தோஷமா யிருக்கிறார். மந்திரியுடன் ஏதோ பேச இங்கு இப்பொழுது வருவதாகச் சொன்னார். இந்த சமயம் பார்த்து அவரிடத்தில் போய் நீங்கள் கேட்டால், சரி தீர்ந்தது!

மது. அப்படியே ஆகட்டும். மிகவும் வந்தனம் தந்தனம்.

சுந். வந்தனம் தந்தனம்! கவிராயரே, சரிதான்!—இதோவரு கிறார் மஹாராஜா மந்திரியுடன்.

[இருவரும் ஒருபுறமாக மறைந்து நிற்கின்றனர்.]

**நரேந்திரனும் வசுபூதியும் வருகிறார்கள்.**

ந. எதற்காக அவர்கள் என்னைப் பார்க்கவேண்டுமாம்?

வ. அப்படியல்ல. இல்லாவிடின் நீரவிசாரியாது தாம் அவசரப் பட்டுத்தண்டனைவிதித்துவிட்டதாகச் சிலர்கூறினும் கூறு வார்கள். அவ்வசையும் தம்மைவந் தணுகாதபடி நேரிற் கேட்டு விடுவோம். நமக்கோ ருசு கெட்டியாயிருக்கிறது.

ந. ஆனால் சரிதான் வரச்சொல். [வசுபூதி போகிறான்.]

**ரத்னாங்கியும் சுமந்திரனும் வருகிறார்கள்.**

ர. [நரேந்திரன் பாதத்தில் வீழ்ந்து] பிராணநாதா! பிராணநாதா! இப்படியும் தாம் நீதி தப்பி நடக்கலாமா? சாரங்கதரன் ஒரு குற்றமும் கனவிலும் எண்ணியிரானே! அவன் ஒன்றும் அறியாப் பாலனுயிற்றே! உம்முடைய மைந்தனென்றேனும்

உமக்குச் சிறிதும் இரக்கமில்லாமற் போவதா? பெற்றமைந் தனைக் கொல்லும்படி யாராவது கட்டளை யிடுவார்களா? அதுவும் தீர விசாரியாது செய்யலாமா? என் முகத்தை யாவது பார்த்து அருளலாகாதா? பிராணநாதா! பிராண நாதா!— [தேம்பி அழுகிறாள்.]

வசுபூதி வருகிறான்.

ந. ரத்னாங்கி! வீண் வார்த்தை யாடாதே! என் மகனாயிருந்தாலு மென்ன! யாராக இருந்தபோதிலும் செங்கோன் முறைப்படி நான் அரசு செலுத்தவேண்டும். இல்லாவிட்டால் பட்சபாத மாய் மகனென்று தண்டியாதுவிட்டார் மஹாராஜா என்று எல்லோரும் நகைக்கமாட்டார்களா?

சும. ஆம், மஹாராஜா. நியாயமிருந்தால் யாராயிருந்தபோதிலும் தண்டிக்க வேண்டியது தான்.

ந. என்ன!

சும. அப்படி தண்டிப்பதும் தீர விசாரித்தே தண்டிக்க வேண்டு மல்லவா?

ந. என்ன இன்னும் விசாரணை செய்வது? தாயென்றும் பாரா மல் பெண்டாளும்படியான பாதகனுக்கு விசாரணையொன்று?

சும. மஹாராஜா, முதலில் சித்திராங்கிதேவி சாரங்கதரனுடைய தாயல்லவே!

வ. பெற்றதா யல்லாவிட்டாலும் சிற்றன்னை யல்லவா?

சும. எப்படிச் சிற்றன்னை? இன்னும் மஹாராஜாவுக்கும் சித்தி ராங்கி தேவிக்கும் விவாகம் ஆகவில்லையே.

ந. ஆகாவிட்டாலுமென்ன? நான் விவாகம் செய்யும்படி தீர்மா னித்திருந்த கன்னிகையல்லவா?

சும. ஆம், விவாகம் செய்யும்படி தீர்மானித்து வைத்திருந்த கன் னிகை, உண்மை தான். ஆயினும் அந்த அம்மாள் தம்மைவிவா கஞ்செய்துகொள்வதாக எப்பொழுதாவது இசைந்தார்களா? இல்லையே; இப்படி இருக்கும்பொழுது இளவரசருக்கு சித்தி ராங்கிதேவி எப்படிச் சிற்றன்னையாவார்கள்?

ந. அதெல்லாமிருக்கட்டும். எப்படி இருந்தபோதிலும் ஒரு கன் னிகையைப் பலாத்காரஞ்செய்து கற்பழிப்பதா?

ர. ஐயோ! வீண்பாபம்! வீண்பாபம்! சாரங்கதரன் அப்படித் தப்பான எண்ணத்தைக் கனவிலும் நினைத்திருக்கமாட்டானே! அவன் ஒரு சூதும் அறியாப் பாலனாயிற்றே! ஐயோ! பிராணநாதா! அக்கள்ளி சித்திராங்கி கூறியதைக் கேட்டு மயங்கிக் கிடக்கிறீரே—

ந. ஸ்!—பேசாமலிரு! நியாயந்தெரிந்தால் பேசு, இல்லாவிடில் பேசாமலிரு!

சும. இளவரசர் இக்குற்றஞ் செய்தாரெனக் கூறுவதற்கு என்ன நியாயங்களிருக்கின்றன ?

ந. மந்திரி, நீ தான் அவைகளையெல்லாம் சொல். அவைகளை என் நாவால் கூறவும் எனக்கு இஷ்டமில்லை.

வ. சுமந்திரரே, முதலில் சித்திராங்கி தேவியினுடைய சாட்சியே இருக்கிறது.

சும. ஐயா! இப்படிப்பட்ட விஷயங்களில் ஒரு ஸ்திரீயினுடைய சாட்சி உதவாது என்னும் நீதியைக்கற்றதில்லையோ ? இது உண்மையென்பதற் கத்தாட்சியென்ன ?

வ. ஏன் பொய்யா யிருக்கவேண்டும் ?

சும. அதற்குக் காரணம் கூறுகிறேன். சித்திராங்கிதேவி சாரங்க தரராஜனை மணம் புரிய விரும்பியிருந்த விஷயம் மஹா ராஜாவே அறியாததன்று, அப்படியிருக்க இளவரசரைத் தன் வசமாக்க, அவரைத்தன்னிடம் புறாவின் காரணத்தைக் கொண்டு வரச் செய்து, தானே பலவந்தப்படுத்தி, அதற்கிசை யாததால், இளவரசர்மீது இப்பழியை ஏன்போட்டிருக்கலா காது ?

வ' அப்படி நடந்ததாக யார் கூறுவது ?

சும. நடந்த சமாசாரத்தைக்குறித்து இளவரசரை நான்விசாரித் ததில் இப்படித்தான் எனக்கு வெளியாகிறது.

ந. அடே, சுமந்திரா, அக்கன்னிகையின் மீது நீ வீணில் தூறு சொல்லுகிறாயா ?

வ. மஹாராஜா, தாம் அவசரப்படவேண்டியதில்லை. சுமந்திரரே! இவ்விஷயங்களில் ஸ்திரீயினுடைய அத்தாட்சியை ஒரு பொருட்டாக எண்ணலாகாது என்றீரே, புருஷனுடைய

சாட்சியை மாத்திரம் கருதுவதோ? என்ன நியாயம்? அன்றியும் இளவரசர் சித்திராங்கிதேவியின் மாளிகைக்குள் விரைவுடன் சென்றதைச் சேவகர்கள் கண்டனர். வரும்பொழுது கந்த களப கஸ்தூரி யணிந்திருந்ததையும் கண்டனர். சிற்றன்னையிடம் செல்பவருக்குக் கந்த களப கஸ்தூரி யென்ன? அல்லாமலும் வெளியிற் போகிறவர் ஒருவருமறியாதபடி ஓடுவானேன்?

சும. இவைகளெல்லாம் சந்தர்ப்பங்களே யொழிய நேரில் என்ன ருசு இருக்கிறது?

வ. இதோ மதனிகை இருக்கிறாள். அவளைக்கேட்போம் மதனிகா, அறிந்த விஷயத்தைக் கூறு.

ந. ஆம், மதனிகா, சீக்கிரம் உண்மையைக்கூறு. பயப்படாதே!

மத. மஹாராஜா, ஒருவருடைய உயிருக்குத் தீங்கிழைம்பதென்றால் எனக்குச் சிறிதும் மனம்வராது. ஆயினும் நான் என்ன செய்வேன்? உண்மைக்கூறும்படி மஹாராஜாவினுக் கிணையாய் விட்டது! ஆயினும், மஹாராஜா! இளவரசரைக் கொலைசெய்து விடும்படியாக உத்தரவளிக்கலாகாது தாம். ஐயோ பாவம்! ஏதோ அறியாத்தனத்தினாலும் யௌவனத்தினாலும் குற்றஞ்செய்துவிட்டார்.

ந. கேட்டாயா சுமந்திரா, ரத்னாங்கி?

ர. பாதகி, பாதகி!

மத. அம்மா, என்னைப் பழியாதீர். நான் என்ன செய்வேன்?

ந. சீக்கிரம் உண்மையைக்கூறு.

மத. கூறுவதென்ன? சாரங்கதரராஜன் சித்திராங்கிதேவியிடம் வந்து பலாத்காரம் செய்தது உண்மைதான். சித்திராங்கிதேவி எவ்வளவோ கூறியும் கேளாது பலவந்தித்தனர்.

சும. இது உனக்கெப்படித் தெரியும்? சித்திராங்கிதேவி சொல்லக் கேட்டதுதானே?

மத. இல்லை, இல்லை. சித்திராங்கிதேவியினுடைய கூக்குரலைக் கேட்டு அறைக்குள் செல்ல முயல, அறை பூட்டப்பட்டிருந்தது. நான் பரிதாபத்தால் கதவின் துவாரத்தின் வழியாக நோக்கி யறிந்தேன்.

சும. ஈசனே ! ஈசனே !

மத. அன்றியும், இதோ அவருடைய அறுபட்ட கச்சை யிருக்கின்றது பாரும். செய்தது என்னவோ தவறுதான்.—ஆயினும், மஹாராஜா மன்னிக்கலாம்.

ந. மன்னிப்பதாவது ?—என்ன சொல்கிறாய் இனி சுமந்திரா ? ரத்னாங்கி, நீயும் கேட்டாயா உன் பிள்ளையினுடைய துர்க்கிருத்தியத்தை ?

சும. அம்மணி, இனி நம்மாலாவதொன்றுமில்லை ! கால வித்தியாசத்தால் ருசு நமக்கு விரோதமாயிருக்கிறது. ஆயினும் இளவரசர் குற்றஞ்செய்தவரல்ல வென்பதற்குத் தடையில்லை, சந்தேகமில்லை. இருந்தபோதிலும் அவ்வுண்மையை ரூபிக்க நம்மாலாகாது இப்பொழுது. நாம் என்ன செய்வது ? ஈசன் செயலெப்படியோ இனி ?

ர. பிராணநாதா, எப்படியாவது என் முகத்தைப் பார்த்தாவது சாரங்கதரனை மன்னிக்கலாகாதா ? அப்படி மன்னிக்காவிட்டாலும் கொன்று விடும்படி கட்டளையிட்டதைவிட வேறு எந்த சிட்சையாவது விதிக்கலாகாதா ? ஐயோ ! அவன் அறியாப் பேதையாயிற்றே ! ஒரு குற்றமு மறியானே ! அவனை இந்த நாட்டைவிட்டு வேண்டுமென்றால் துரத்திவிடும். உயிருடன் விட்டுவிடுமே ! எங்கேயிருந்தபோதிலும் உயிருடனிருந்தாற் போதுமே எனக்கு ! பிராணநாதா, என் பொருட்டவ்வளவாவது அருளலாகாதா ? பிராணநாதா !—

ந. ஸ் ! பேசாதே ரத்னாங்கி ! இப்படிப்பட்ட மஹா பாதகஞ் செய்தவனை இப்புவியிலிருக்க விடலாகாது ! இன்னும் எத்தனை பெயருடைய கற்பை யழிப்பானோ ?—வசுபூதி, எல்லாம் தீர விசாரித்தாயது ! இனித் தாமதியாது அவனை உடனே சிரச்சேதம் செய்து விடும்படி கட்டளையிடு. போ சீக்கிரம் !

[வசுபூதி ஒரு புறமாய்ப் போகிறான். மற்றொரு புறமாக நரேந்திரன் விரைவுடன் போகிறான்.]

ர. அடா மகனே ! தீர்ந்ததடா உன் விதி. [அழுகிறாள்.]

சும. அம்மணி, இனிவருந்தி யென்ன பயன் ? வாரும், அவரிடம் போய் அவருக்குத் தேறுதல் சொல்லுவோம்,

ர. மகனே! மகனே! இதுவோ உன்கதி? இதுவோ உன்கதி ?

[சுமந்திரன் ரத்னாங்கியைத் தாங்கிச் செல்கிறான்.]

மத. [தனக்குள்] ஐயோ! பாபம்! எனக்கே துக்கமாயிருக்கிறது. ஆனாலும் நான் என்ன செய்வேன்? என்மேற் குற்றமில்லை. சாளுவதேசத்தரச குமாரிக்கு நான் செய்த சத்தியத்தின்படி நடக்கவேண்டியவள் தானே!

சுந். [மறைவிடமிருந்து வெளிவந்து] மதனிகா, இப்பொழுதாவது— என்ன சொல்கிறாய்?

மத. இவனெங்கிருந்து முளைத்தான்? சீ! பயித்தியக்காரா! உனக்குப் புத்தி யெங்கே போயிற்று? நான் உன்னை விவாகம்செய்து கொள்வேனென் றெண்ணுவதைவிட அதோ அச்சூரியன் உன்னை விவாகம் புரிவான் என்றெண்ணுவாய். புத்திசாலியாக வாழ்போ, "தாடிபற்றி எரிகிற சமயத்தில் சுருட்டிற்கு நெருப்பு கேட்டானாம்," போ என்முன் நில்லாதே பஞ்சையே! [போகிறாள்.]

சுந். என்னைப் பார்த்தால் பஞ்சையாகவா இருக்கிறது? சீ! நான் செத்துப்போய் விடலாமா என்று நினைக்கிறேன்.

மது. [மறைவிடமிருந்து வெளிவந்து] அப்பனே, குரங்கேற்ற கடி செய்ய மஹாராஜாவிடம் சொல்ல மறந்துவிட்டாயே?

சுந். இது தான் நல்ல சமயம்; எரிகின்ற கொள்ளியை ஏறத்தள்ளுகிறீர்! குரங்கும் ஆயிற்று, ஏற்ற கடியுமாயிற்று, போமையா!

[ஒரு புறமாகத் தள்ளிவிட்டுப் போகிறான்.]

மது. உம்!—எல்லாம் தகப்பனுருடைய செயல்! [போகிறான்.]

காட்சி முடிகிறது.

---

# மூன்றாம் அங்கம்

## முதற் காட்சி.

இடம்—ராஜவீதி. காலம்—பகல்.

சித்திராங்கி மேல்மாடியில் தோற்றுகிறாள்.

சி. ஐயோ! மதனிகையின் மொழியைக்கேட்டு நான் என்ன தப்பிதம் செய்துவிட்டேன்! ஆ! வீணில் என் பிராணநாதருயி

ருக்கே வழி தேடிவிட்டேனே! இனி நான் என்ன செய்யக் கூடும்? மஹாராஜா நான் என்னவேண்டியும் ஒரே பிடிவாத மாயிருக்கிறார். இப்பொழுது நான் உண்மையைக் கூறினும் நம்பமாட்டார். ஐயோ! இந்த விபரீதத்திற்கு என்ன செய்வது? தன்வினை தன்னைச் சுடுமென்பதுபோல் நான் செய்த குற்றம் என்னையே வருத்துகிறதே! நான் ராஜகுமாரர் மீது பழிசாற்றினால் மஹாராஜா எப்படியாவது என்னை அவருக்குப் பலவந்தத்தினாலாவது விவாகம் செய்துவைப்பாரென்றெண்ணி அவ்வாறுசெய்ய, அது முடிவில் என் பிராணநாதருடைய உயிருக்கே தீங்காய் முடியவேண்டுமா? ஆம்! ஆம்! தீமையால் நன்மை யொருகாலும் உண்டாகாது என்பது உண்மைதான். ஐயோ! என் பிராணநாதரை அதோ கொலையாளிகள் அழைத்துவருகின்றனர் இப்புறமாக! நான் இக்கோலத்தில் அவரை எப்படிக் கண்ணெடுத்துப் பார்ப்பேன்? ஐயோ! பாபி நானன்றோ அவரை இக்கோலத்துக் காளாக்கினேன்? பார்க்கவும் மனந்தாளவில்லை. பாராதிருக்கவும் மனம் பொறுக்கவில்லை! ஆ! இப்பொழுது பாராவிட்டால் என் பிராணநாதரை நான் எப்பொழுது பார்க்கப் போகிறேன்? பிராணநாதா! பிராணநாதா!

[இரண்டு கொலையாளிகள் சாரங்கதரனை அழைத்து வருகின்றனர். ரத்னாங்கியும், சுமந்திரனும் அழுதவண்ணம் வருகின்றனர். இரண்டு தோழிகள் பின்னால் வருகின்றனர்.]

சா. அம்மா, உமது பஞ்சின்மெல்லடி பருக்காங் கற்களிற்பட்டு வருந்த தொலைதூரம் என்பின் நடந்துவந்தீர்; இனி நில்லும்; எவ்வளவு தூரம் பின் தொடர்ந்து வந்தாலு மொன்று தான். விதியை வெல்வார் யார்? என்கதி இது! இனித் தாம் துயரப்பட்டென்ன பலன்? ஈசனரு ளிப்படியானால் நாம் என்ன செய்வது? அம்மா, இனி எனக்கு விடையளியும்.

ர. அப்பா கண்ணே! கண்ணே! உனக்கெப்படியடா விடையளிக்க என் பாவி மனந் துணியும்? நீ யமனுலகுக்குச் செல்ல, இப்பாதகர்கள் கையில் போய்வாவென்று சொல்லி எப்படியடா அனுப்புவேன்? மைந்தா! உன்றன் மனந்தான் எப்படித் துணிந்ததோ என்னைக் கேட்க? உன்னை விட்டுப் பிரிந்து

எப்படியடா உயிர்த்திருப்பேன்? நீ இறக்க நான் பிழைத்திருப்பதோ? இப்பாவிகள் என்னையும் உன்னுடனே கொன்றுவிடமாட்டார்களா ?

கோ. எங்களை யேன் திட்டுகிறீர்கள் அம்மா ? நாங்கள் என்ன செய்வோம் ? எங்கள் ஜீவனம், மஹாராஜாவின் ஆணை !

சும. அம்மணி, தம்முடைய மனத்தைத் தாமே தேற்றிக்கொள்ள வேண்டியது தான்; இனி நாங்கள் என்ன தேறுதல் சொல்லப் போகிறோம் ? நம்மாலொன்றுமில்லை. எல்லாம் ஈசன் செயல் ! தாங்கள் இனிப் பின் தொடர்தல் நியாயமன்று. ராஜகுமாரருக்கு விடைகொடுத்துவிட்டு அரண்மனைக்கேக வேண்டும் தாம் தயைசெய்து.

ர. ஆ! சுமந்திரா! உன்மனமும் கல்லாய்விட்டதோ ? சேயை விட்டுவிடத் தாயைப் பிரிக்கிறாயே ! அப்பா! நீயாவது மஹாராஜாவிடம் கூறி அவனுயிரைக் காப்பாற்று வாயென்றெண்ணியிருந்தேனே! அந்த எண்ணமும் வீணாயிற்றே, வீணாயிற்றே!

சும. அம்மணி, நான் என் செய்வேன்? என்னாலானமட்டும் முயன்றேன்! தெய்வாக்ஞை யிப்படி இருந்தால் பேதை மாந்தர்களால் என்ன முடியும்?

கோ. ஐயா, நேரமாகிறது வாரும் சீக்கிரம் ! மஹாராஜா ஆணை !

சா. அம்மா, இனி தாமதஞ் செய்யாதீர் ! இவ்வநித்தியமாகிய உடலை நிலையெனவெண்ணி தாம் வருந்துவானேன் ? "குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே, உடம்போ டுயிரிடைநட்பு" அம்மணி ! நான் உமக்கு மகனாகப் பிறக்க வில்லை யென்றெண்ணி உமது மனத்தைத் தேற்றிக்கொண்டு எனக்குச் சீக்கிரம் விடையளியும், நான் போய் வருகிறே னம்மா !

ர. கண்ணே ! நீ போய் வரப்போகின்ற தில்லையே ! அப்பா! போய் மீண்டுவருவதனால் சந்தோஷமாய் விடையளிப்பேனே. கண்ணே ! உன் வாயைத் திறந்து நீயே இம்மாற்றம் எப்படிசொல்லத் துணிந்தாயடா ?

சா. சுமந்திரா ! அப்பாதகி என்னுயிருக்கு வழி தேடியதற்காக நான் அவளைக் கடிந்துகொள்ளவில்லை. என் அன்னையை

நான் இந்த அவஸ்தையில் காணும்படி வைத்தாளே! அதற்கே வருந்துகிறேன்! பாதகி, பாதகி!

சி. [மாடியிலிருந்து] பிராணநாதா, பிராணநாதா! நான் பாதகியன்றே! பாதகியன்றே! என்மீதொரு குற்றமுமில்லையே!—

சா. இந்தப்பேய் இங்கும் வந்ததா?

ர. அடிபாதகி! சித்ராங்கி! கொலைபாதகி! இங்கும் வந்தனையா? பாபி! என்மைந்தனை வீணில் இக்கோலங் கண்டனையே! நீ சுகமாய் வாழப்போகிறாயா? ஒரு பாபமுமறியாத அவன் மீது பழிசாற்றி உயிருக்கே உலைதேடினையே; நீ பெண்ணா? பேயே! என் வயிறு பற்றி யெரிகிறதே! இது உன்னைச்சும்மா விட்டுவிடப் போகிறதோ! பெற்ற என் வயிறு பற்றி யெரிகிறதுபோல் நீயும் சீக்கிரம் எரிந்து சாம்பலாய்ப் போகாயா! உலகத்தாரெல்லாம் உன்னைச் சித்ராங்கி சித்ராங்கி யென்று பழியாரா! பாபி! சண்டாளி! தோஷி!—

சா. அம்மா, பொறும், அவளை வீணில் ஏன் வைகிறீர்? நம்முடைய விதியை நோவவேண்டும்:—

சி. பிராணநாதா! நான் உண்மையைக் கூறுகிறேன் கேளுமே.—

சா. சீ! பிராணநாதா என்று என்னை யழையாதே! பிராணநாதனாவது! என் பிராணனுக்குத்தான் உலைவைத்தனையே, இன்னும் என்ன? என்னை இக்கோலத்துடன் கண்டு சந்தோஷிக்க வந்தாயோ? நில்லாதே என் கண்ணெதிரே!

சும. அம்மா! ஏன் எங்களெதிரில் வந்து எமது துக்கத்தைவிருத்தியாக்குகிறீர்? நீர் உள்ளே போம்!

சி. பிராணநாதா! என்னை மன்னித்ததாகக் கூறுமே! என்னை மன்னித்ததாகக் கூறுமே! பிராணநாதா, உண்மையைக்கூறுகிறேன் கேளும்; நான் ஒன்று நினைக்க வேறொன்றாய் முடிந்ததே! உம்முயிரைப்போக்க வேண்டுமென்று நான் கனவிலும் எண்ணவில்லையே! இப்படி முடியுமென்று நான் நினைக்கவில்லையே! இனி நான் என்னசெய்வேன்!—

சா. உன்மேற் குற்றமில்லை! மன்னித்தேன் போ! நீ யென்ன செய்வாய்? என் விதிப்பயன்! மன்னித்தேன் உன்னை மனப்பூர்வமாக! சுகமடைந்து இனியாவது நற்பெயரெடுத்து வாழ், போ. இனி என் முன் நில்லாதே.

சி. பிராணநாதா! பிராணநாதா!

[மேல்மாடியினின்றும் மறைகிருள்.]

ர. மைந்தா, உன்னைக்கொல்லும் பாபியென்றும்பாராது அவளை மன்னித்த நற்குணமுடைய உன்னை நான் மகனுகப்பெற்றும் நீ யிறக்க நான் உயிர் வாழ்வதோ?

சா. அம்மணி, நேரமாகிறது. எனக்கு விடையளியும்.

சும. ஆம், அம்மா, நேரமாகிறது!

சா. அம்மா, உமக்கேதாவது இதுவரையில் குற்றஞ் செய்திருந் தால் மன்னியும்! பிதாவுக்கு என்னை மன்னிக்கும்படி கூறும். அவரும் சீக்கிரத்தில் உண்மையையறிந்து நிரபராதியாகிய என்னைக் கொன்றதற்காக வருந்தப்போகிருர், அப் பொழுது அவருக்குத் தேறுதல் சொல்லும். நான் அவ ரைக் கடிந்து கொள்ளவில்லை யென்று உறுதியாய்க்கூறும். நான் இவ்வுலகில் ஒருவரையும் கடிந்துகொள்ளவில்லை, என் விதியையே வெறுக்கிறேன்!—

ர. கண்ணே! கண்ணே! இம்மன உறுதி யெங்கிருந்தடா வந் தது?

சா. வேளைக்கு எல்லாம் வரும், அம்மா! என்பொருட்டுப் பிதாவை நீர் வெறுக்காதீர். எப்பொழுதும் முன்போலவே அவரையே கொழுநனென்றும் தெய்வமென்றுமெண்ணி அவரது சுகத் தையே நாடிவாரும். எல்லாமுணர்ந்த உமக்குநான் கூறவேண் டியதில்லை. ஆயினும் கூறினேன்! [ரத்னுங்கியின் பாதத்தில் வீழ்ந்து] அம்மா! நீர் என்னைப் பெற்றெடுத்ததற்குப் பிரதி ஒன்றும் செய்திலேன், உம்மை வருத்தினேனே அவ்வளவு தான். ஈசன்செயலிப்படி இருந்தது! அம்மணி, உமது பாதம் பணிந்தேன். நீர் சந்தோஷமாய் யிருக்கும்பொழுது எக்காலத் திலாவது சாரங்கதரன் என்றுமக்கு ஒரு மைந்தனிருந்ததாக நினையும், நான் போய் வருகிறேன்! நான் போய் வருகிறேன். விடையளியும்! விடையளியும்! [அழுகிருன்.]

ர. கண்ணே! வருத்தப்படாதே! சீக்கிரம் சுவாமியினுடைய பாதம்போய்ச் சேர்வாய்; இப்பாழுலகை விட்டுநானும் உனக் குப்பின் சீக்கிரம் வருகிறேன். அஞ்சாதே! கண்மணி!

போய் வருவாய்! போய் வருவாய்! கடைசிமுறை எனக்கொரு முத்தம் தாடா! கண்ணே பயப்படாதே!

[சாரங்கதரன் ரத்னாங்கியை முத்தமிட அவள் மூர்ச்சையாகிருள்.]

சும. ஈசனே! ஈசனே! இக்கோலத்தைக்கண்டு உய்யவும் என்னைப் பிறப்பித்தனையே!

கோ. அடே! நமக்கே துக்கமாயிருக்கிறதடா!

சா. ஹா! மூர்ச்சையாய் விட்டார்கள் :—அம்மட்டும் நலந்தான்! தாதிகளே, அரண்மனையினின்றும் இன்னும் இரண்டு தாதியர்களை வரவழைத்து அம்மாளை அப்படியே எடுத்துச்சென்று சைத்தியோபசாரம் செய்து தேற்றுங்கள். சுமந்திரா, நீ இங்கிருந்து பார்த்துக்கொள் :—

சும. ஐயனே, நான் மாத்திரம் இன்னும் கொஞ்சம்தூரம் தம்முடன் வர உத்தரவளிக்க வேண்டும்.

சா. சரி! நேரமாகிறது. நாம்போவோம் வா! [ரத்னாங்கியின் பாதத்தைப் பணிந்து] ஈசனே! ஈசனே! எல்லாம் உன்செயல்!—நடவுங்கள்! [காட்சி முடிகிறது.]

---

## இரண்டாம் காட்சி.

இடம்—அந்தப் புரத்தைச் சார்ந்த தோட்டத்தில் ஓர் இருண்டமூலை.

காலம்—இரவு.

அக்னிப் பிரவேசமாகச் சித்தமாய் சித்ராங்கி நிற்கிருள்.

சி. பத்னியின் வாக்கு பலிக்காமற் போமோ? ரத்னாங்கிதேவி கூறிய வண்ணமே நான் அழிகிறேன். வேண்டும்!—ஆ! இந்த அகோர தீ என்ன சுடர் விட்டெரிகிறது! ஆயினும் சாகத்துணிந்தவர்கட்கு கடல் முழங்காலாழமென்பது போல் இதை நான் கருதுவானேன்? இப்பாவியைத் தகிக்கப் போகிறேமே விரைவில் என்று, அக்னிதேவன் சந்தோஷித்து, தன் சுவாலைகளை இங்ஙனம் வீசுகிருனே! இவ்வக்னியில் எரிக்கப்பட்ட பின்பாவது என் ஆன்மா புனிதமாகுமா? என் பாப மொழியுமா? என் ஜன்மம் சபலமாகுமா? ஈசனே! நான் செய்த சிறு குற்றத்திற்காக இப்படிப்பட்ட தண்டனையா

விதிப்பது நீர்? என்னைக் கெடுப்பவர்கள் கெடுத்தார்களே யொழிய சுபாவத்தில் நான் தீய குணமுடையவளல்லவே! நான் ஒரு கஷ்டமின்றி இஷ்டப்படி சாரங்கதரராஜனை மணந் திருப்பேனாயின், தீமை என்பதை மனத்திலும் நினையாதவ ளாய், நிரபராதியாய்ச் சிறந்த நற்குணமுடையவளாய், எல் லோருக்கும் நன்மையே செய்துகொண்டு உலகத்தோரெல் லாம் தாயெனத் துதித்து தயாபரியென்று புகழும்படி நெடு நாள் வாழ்ந்திருப்பேனே! என்னைச் சூழ்ந்த சந்தர்ப்பங்க ளல்லவோ என்னைக் கெடுத்தன! நரேந்திர ராஜன் எனக்கு யமனாய்த் தோன்றவேண்டுமா? அவர் என்மீது காதல் கொள்ளவேண்டுமா? என் பிதா இங்கென்னை ஏமாந்தனுப்ப வேண்டுமா? இவர்கள் சூதினாலும் அறியாமையினாலு மன்றோ நான் தீயவழியை எண்ணும்படி நேர்ந்தது? இவர்கள் மீதுங் குற்றமில்லை என்னுருயிருக்கும் பெயருக்கும் யமனாக அந்த மதனிகையாகியதோழியொருத்தியெனக்கு வாய்க்கவேண்டுமா? அவள் தூண்டுதலினாலன்றோ நான் கெட்ட எண்ணங்களை முத லில்,என் மனதிற்கொள்ளவும் வாய்ந்தது? பிறகு அவள் ஏவலி லன்றோ வீணில் சாரங்கதரன்மீது முடிவில் பழி சாற்றினேன்? மதனிகா! மதனிகா! நீயே யென் பெயரைக்கெடுத்தாய்! குலத் தைப் பாழாக்கினாய்! உயிரைப்போக்குகின்றாய்! நானுனக்கென் னடி அபராதம் செய்தேன்?—அவளை வீணில் நோவதிலும் பயனில்லை; சொல்பவர்கள் சொன்னால் கேட்பவர்களுக்கு எங் கே போயது மதி யென்பதை யெண்ணாது அவள் வார்த்தையை நான் ஏன் கேட்டிருக்கவேண்டும்? நான் அப்பொழுதே தீமை என்று இம்மார்க்கத்திற் பிரவேசியாது ஏன் இருந்திருக்கலா காது? என் மீதே குற்றம். அவளைப் பழிப்பதிற் பயனென்ன இனி? வருத்தப்பட்டாவதென்ன? இப்படி நடந்திருக்கலாமே யென்று யோசித்து வருந்துவானேன்? அவ்வண்ணம் நடந்தி ருக்கவேண்டும் அப்பொழுதே. ஆயினும், ஐயோ! இந்த உயர்வா ழ்க்கையை மறுபடியும் ஒரு முறை நான் பெறக்கூடுமானால் இப்பொழுதே நான்பெற்ற அறிவைக்கொண்டு என்ன நற்பெ யரெடுத்து வாழ்வேன்? வீண்யோசனை! வீண்யோசனை! நேர மாகிறது! இனிக்காலதாமதம் செய்யலாகாது! மஹாராஜாவு க்கு நடந்த உண்மைகளை யெல்லாம் எழுதி சாரங்கதரராஜனை மன்னிக்கும்படி நான் கேட்டுக்கொண்ட நிருபத்தை அவரிடம்

அப்பாங்கி சேர்ப்பதற்குள், நான் எனதுயிரை மாய்த்துக்கொள்ளவேண்டும். எப்படியும் அவர் உண்மையை யறிந்தவுடன் என்மீது அடங்காச்சினமும் குமாரன்மீது அடங்காத் துக்கமும் அடைவார். அச்சமயத்தில் நான் உயிருடனிருப்பது தவறு. ஐயோ! சாரங்கதரராஜன் கொலையாளிகளால் இறப்பதன்முன் இவர் உண்மையையறிந்து அங்கு சென்று இளவரசர் இறவாதிருக்கும்படி செய்வாராக! ஆயினும் அதற்குக் காலமில்லையென் றெண்ணுகிறேன், ஈசனே! ஈசனே! நான் அந்த ஒரு பாபமுமறியாத ராஜகுமாரனுக்குச் செய்த தீமைக்கெல்லாம் அவரதுயிரைமுடிவில் காப்பாற்றிய இப்பரிகாரமாவது செய்யும்படி திருவுளமருளலாகாதா? ஐயோ! அவரை விலங்கிற்பூட்டிக் கொலைக்களத்துக் கொடியர்கள் அழைத்துச் செல்ல, தலைகுனிந்து துக்கத்தால் அவரைப் பின் தொடர்ந்து உத்தமியாகிய அவர் அன்னையும், சற்குமாரனுகிய சுமந்திரனும் அழுதுகொண்டு செல்ல, அக்கோலத்தைக்கண்டு அதற்கெல்லாம் காரணமாகிய கொடும்பாபி நான் இதுவரையில் உயிருடனிருக்கிறேனே! நான் அவர்மீது காதல் கொண்டதற்கு அவருக்குச் செய்த உபகாரம் இதுதானே? சீ! என் காதல் மெய்க்காதலன்று. இல்லாவிடில் என் காதலரை இக்கதிக்குக் கொண்டுவந்திருப்பேனு? என் காதல் உண்மையானதானல் என் உயிரையாவது மாய்த்து அவருக்குச் சிறிதும் தீங்கு வாராவண்ணம் காத்திருக்கமாட்டேனே? அதுவன்றோ மெய்க்காதலர் குணம்? என்னைக் கருதினேனேயொழிய என் காதலரைக் கருதினேனு? சீ! மெய்க்காதலுக்கும் எனக்கும் எவ்வளவு தூரம்! அதைப்பற்றி நான் நினைக்கவும் தக்கவளல்ல!—நேரமாகிறது! இனி க்ஷணமும் தாமதிக்கலாகாது. மஹாராஜா வந்துவிட்டால் என் செய்வது? இத்தீயை மும்முறை வலம்வந்து அதிற் பிரவேசித்து என் பாபத்தையும் உயிரையும் உடலையும் போக்குகிறேன்! [தீயை வலம் வருகிறாள்.] அக்னிதேவனே! உன்னை ஒரு வரம் வேண்டுகிறேன்; என்னைப் போன்ற கொடும்பாபிகளை, இன்னும் க்ஷணப்பொழுதில் என் தேகத்தை எப்படி தகிக்கப் போகிறீரோ, அப்படியே தகிப்பீராக! சாரங்கதர ராஜனே! நீர் உயிர் பெற்று நெடுநாள் வாழ்

வீராக? சாரங்கதரராஜனே மறு ஜன்மத்திலாவது உம்மை நான் பதியாகப் பெறுவேனாக!—

[தீயில் வீழ்ந்து மரிக்கிறாள்.]
[காட்சி முடிகிறது.]

---

## மூன்றாம் காட்சி.

இடம்.—கொலைக்களம். காலம்—இரவு.

**சாரங்கதரனை** இரண்டு கொலையாளிகள் அழைத்து வருகின்றனர்.

சுமந்திரன் அழுதவண்ணம் வருகிறான்.

சா. சுமந்திரா, வரவேண்டிய இடத்திற்கு வந்துவிட்டோம். இனிப் போகவேண்டிய இடத்திற்குப் போக வேண்டியது தான். தோழா, இனி நீ இங்கிருப்பது நியாயமன்று. நீ விடைபெற்றுச் செல், என்னைக் குறித்துத் துக்கப்படவேண்டாம் போ.

சும. ஐயனே, துக்கப்படவேண்டாமென்று எவ்வள வெளிதிற் சொல்லிவிட்டீர்? அரசே, நான் எவ்விதம் துக்கப்படாமலிருப்பது? நான் பட்டணத்திற்குத் திரும்பிப் போனவுடன் யாரைப் பார்க்கினும், எதைப் பார்க்கினும், எவ்விடத்தைப் பார்க்கினும் உம்முடைய ஞாபகமே வருமன்றோ பாபி என் மனதிற்கு? ஐயனே, நாம் ஒன்றாய் இதுவரையில் விநோதமாய்க் கழித்த காலத்தை யெல்லாம் நினைக்கினும், நாம் ஒன்றாக விளையாடிய இடங்களை யெல்லாம் பார்க்கினும், நம் மிருவருடைய தோழருடன் வார்த்தை யாடுங் காலத்திலும், தம்முடைய பெற்றோர் உற்றாரை நோக்குங் காலத்திலும் பாவி என் மனம், ஐயனே, என்ன தடுமாறப்போகிறதோ! ஈசனே! ஈசனே!

[கண்ணீர் விட்டழுகிறான்.]

சா. சுமந்திரா, நீ எனக்கு இதுவரையில் கூறிய உறுதிமொழிகளை யெல்லாம் நீயே மறந்து பேசுகிறாய்! மனோதைரியத்தை நழுக விடாதே! உற்றுப் பார்க்கில் இவைகளெல்லாம் மாயையே யன்றி வேறென்ன இருக்கிறது? நான் யார்? நீ யார்? இவ்வுலகம் யாது? ஒன்றுமில்லை.—

சும. ஐயனே, இவ்வண்ணம் பேசுதல் எளிதே! அவ்வண்ணம் நடத்தலோ அரிது, அரிது!

சா. ஏன் நான் நடக்கிறேன் பாரிப்பொழுது! சுமந்திரா, நேர மாகிறது, விடைபெற்றுச்செல், என்ன வருந்தியும் என்ன பிரயோசனம்?

சும. ஐயனே, உம்மை எப்படி நான் விடைபெற்றுச் செல்வது? எங்கே செல்வது? யாரிடம் செல்வது? எங்கு சென்றபோதி லும் என் மனத்துயரம் போமோ? சற்றேனும் தணியுமோ? தணியாதே! தணியாதே!

கோ. அரசே நேரமாகிறது, வாருங்கள்.

சா. தோழா! நீயே உன் மனதைத் தேற்றிக்கொள், என்னாலாவ தென்ன இருக்கிறது! ஒன்றுமில்லை, எல்லாம் ஈசன் செயல்! என் வாழ்நாட்களை ஒழித்துவிட்டேன். நான் அறிந்தும் அறியாதும் எவ்வளவோ பிழைகளைச் செய்திருப்பேன். அவைகளையெல்லாம் என்னைப் படைத்தவன் அதன்பொருட்டு மன்னிப்பானாக! நீயும் உன் வாழ்நாட்களை நல்ல வழியிலேயே கழித்துத் தீமை யென்பதை மனத்திலும் எண்ணாதவனாய் வாழ்வாயாக! அப்படி நடந்தும் உனக்குத் தீங்கு நேரிடுமாயின் அது உன் குற்றமன்று, தெய்வச்செயல் என்று அதையும் பொறுத்து, உன் காலம் வந்தபொழுது பாழாகிய இம்மாய உலகை நீத்து, நிரந்தரமான நாதன் திருவடிகளை யடைகிறே மென்று சந்தோஷத்துடன் உயிர்விடு! இவ்வுடலை நம்பாதே! இவ்வுலகை நம்பாதே! உன் பெற்றோரை நம்பாதே! உன் உற் றோரை நம்பாதே! நாதன் திருவடியை நம்பு!

சும. ஐயனே, அப்படியாயின் நானுமிப்பொழுதே இறந்து உம் முடன் வரும்படி அநுக்கிரகியுமே!

சா. அது தவறு, நாமாக நம்முயிரை மாய்த்துக்கொள்ளலாகாது. அவன் கொடுத்ததை அவனுக்கு வாங்கிக்கொள்ள எப்பொழு திஷ்டமோ அப்பொழுது வாங்கிக்கொள்ளட்டும். நாமாக அதைக் கொடுக்க முயலலாகாது.

சும. ஐயனே, நீர் இறந்தபின் இப்பாபி உயிர் வாழ்வதோ? உயிர் போனபின் உடலிருந்து பயனென்ன? என்மீது அவ்வளவா கிலும் கருணை புரியலாகாதா?

சா. சுமந்திரா: புத்திசாலியாகிய நீயே யென்ன இப்படி வார்த்தை யாடுகிறாய்? நீ இப்பொழுது இறப்பது நியாயமன்று; நான்

போனபின் என் தாய்தந்தையர்க்கு நீயே மகனாய் தேறுதல் கூறி, சந்தோஷிப்பிக்கவேண்டும். என் பொருட்டாவது உயிர் வாழ்ந்திரு. நெடுநாள் சுகமாய் நீ வாழ்ந்திருப்பாயாக நற்பெய ரெடுத்து! சுமந்திரா! நான் விடைபெற்றுக் கொள்ளுகிறேன். [சுமந்திரனைக் கட்டியணைத்து] அப்பா, ஏன் வருந்துகிறாய் என் பொருட்டு? வந்தது வந்த இடத்திற்குப் போகிறது. அதற்கு வருந்துவானேன்? சொத்துடையவனிடம் சொத்தை ஒப்பு வித்துவிடவேண்டுமல்லவா? வருந்தாதே, நீ வருந்துவதைப் பார்க்க என் மனம் தாளவில்லை. என் மன உறுதியையும் கலக்காதே.

சும. ஈசனே! ஈசனே!

கொ. ஐயா, வாரும் இப்படி, உட்காரும் முழந்தாளிட்டு.

சா. [முழந்தாளிட்டு] ஆ! ஆ! [நகைக்கிறான்.]

சும. ஐயனே, என்ன நகைத்தீரோ?—

சா. ஒன்றுமில்லை. ஒரு காரியத்தை நினைக்க நகைப்புண்டா யிற்று,

சும. என்ன அது?

சா. ஒன்றுமில்லை. பிள்ளைகள் தவறு செய்தால் தாய் தந்தையர் களிருக்கிறார்கள், அவர்களைத் தண்டிக்க; அவர்கள் தப்பிதம் செய்தால் அரசனிருக்கிறான்; அரசன் துன்மார்க்க மிழைத் தால் தெய்வமிருக்கிறது; தெய்வமே, எனக்கிப்படி விதித் தால் யார் என்ன செய்வது என்று நகைத்தேன்! ஆயி னும் அவருடைய திருவுள்ளத்தை அறிந்தார் யார்? ஒருவரு மில்லை!

சும. [கீழே விழுந்து சாரங்கதரனைக் கட்டிக்கொண்டு] ஐயனே! ஐயனே! இந்த ஸ்திதியில் உம்மைக் கண்ணாரக் கண்டு பாவி நான் பிழைத்திருக்கிறேனே! இத்துயரத்திற் கென்றோ நான் இப் புவியிலுதித்தேன்? ஈசனுக்குத் தான் மதிகெட்டதோ? [தேம்பி அழுகிறான்] கொலையாளிகளே, எங்களிருவரையும் இப் படியே கொன்று விடுங்கள்! கொன்று விடுங்கள்!

சா. சுமந்திரா, எழுந்திரு. இப்படி நீயே மனக்கலக்கப்படலாமா? இனி நேரமாகிறது, விடை பெற்றுக்கொள், நான் இறக்குங் கால் நீ பார்த்துச் சகிக்கமாட்டாய், விடை பெற்றுக்கொள்.

சும. ஐயனே! அதை நினைக்கவும் நெஞ்சம் பகீர் என்கிறதே! என் செய்வேன், என் செய்வேன்! ஐயனே, நான் விடை பெற்றுக் கொள்கிறேன்! நான் போய் வருகிறேன்!

சா. சுகமாய்ப் போய்வா! நெடுநாள் நற்பெயருடன் வாழ்ந்து முடிவில் ஈசனிணையடியை அடைவாய்!

சும. ஐயனே, தாம் ஏதாவது இன்னும் கூறவேண்டியிருக்கிறதோ தமது தாய் தந்தையர்க்கு?

சா. ஒன்றுமில்லை. நிரபராதியாகிய சாரங்கதரன் தன்னுயிரை ஈசனுக்கும், தன்னுடலைப் பூமிக்கும், தான் செய்த சிறு புண்ணியத்தை உலகத்தோர்க்கும் கொடுத்து, தன் பெரும் பாபத்தையே தான் அனுபவிக்கக் கொண்டு போனதாகச் சொல். இனி நில்லாதே, சுகமாய்ப் போய் வா! [சுமந்திரன் போகிறான்.]

சா. கொலையாளிகளே, நான் சற்று நேரம் ஈஸ்வரனைத் தியானிக்கவேண்டும். அதன் பிறகு உங்கள் வேலையை முடித்துக் கொள்ளுங்கள்.

கொ. ஐயா, எங்களை மன்னிக்கவேண்டும்.

சா. அப்படியே மன்னித்தேன். உங்கள் மீதென்ன குற்றம்? ஒன்றுமில்லை!—ஈசனே! ஜகதீசனே! நாயேன் நாடினேன் நின் பதம். உன் பாதத்தில் அடியேனைச் சேர்க்கும் காலம் வாய்த்து விட்டது!

“ செழுக்கமலத் திரளன நின்சேவடி சேர்ந்தமைந்த
பழுத்தமனத் தடியருடன் போயினர்யான் பாவியேன்
புழுக்கணுடைய புன்குரம்பைப்பொல்லாக்கல்வி ஞானமிலா
வழுக்குமனத் தடியேனுடையா யுன்னடைக்கலமே. ”

[தலையை வணங்க, கொலையாளிவாளை வீசுகிறான், காட்சி முடிகிறது.]

நாடகம் முற்றிற்று.

Printed at the India Printing Works, Madras.